# அம்ருதலஹரீ

## தொகுதி 2, பகுதி 12

## September 10, 1940

Record no. 112

# *Amrutalaharī*

# *Tokuti 2, pakuti 12*

# *September 10, 1940*

Record no. 112

"AMRUTALAHARI" [A Monthly Journal] Regd. No. M. 3978.

ஸ்ரீ:

# அம்ருதலஹரீ.

—மாதந்தோறும் வெளிவருவது—




| தொகுதி 2<br>Vol. 2. | விக்ரம, ஆவணி மீ 26உ<br>10—9—1940 | பகுதி 12<br>No. 12 |
|---|---|---|


— பத்ராதிபர்கள் —


ஸ்ரீ காஞ்சி. ப்ர. அண்ணங்கராசார்யர்,

ஸ்ரீரங்கம். மே. ஸுந்தரராஜாசார்யர், Mg. Ed.,



—(ஆபீஸ்)—
கீழச்சித்திரைவீதி,
ஸ்ரீரங்கம்.

விளம்பர விகிதங்களுக்கு எழுதித் தெரிந்து கொள்க.

Office :
EAST CHITRA STREET,
SRIRANGAM.

## விஷய அட்டவணை. பக்கம்.



## நேயர்களுக்கு அறிவிப்பு.

☞ நிருபர்கள் எழுதும் வியாஸங்களின் குற்றம் குறைகளுக்குப் பத்ராதிபர்கள் எவ்விதத்திலும் பொறுப்பாளிகள் அல்ல.

☞ வியாஸங்கள் "பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார், வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலை, சின்ன காஞ்சீபுரம்." என்கிற விலாஸத்துக்கு அனுப்புதல் வேண்டும்

☞ சந்தா நேயர்கள், விலாஸ மாறுதல்களை ஆபீஸுக்குத் தெரியப்படுத்தினால் நலமாயிருக்கும்.

## சந்தா விபரம்.

| | |
|---|---|
| சாதாரணச் சந்தா | ஒரு வருஷத்திற்கு ரூ. 2. |
| அபிமானி சந்தா | ஒரு வருஷத்திற்கு ரூ. 5. |
| போஷகர் சந்தா | ரூ. 35. |




ஸ்ரீரங்கநாயிகாஸமேத ஸ்ரீரங்கநாதபரப்ரஹ்மணே நம:।

॥ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரேப்யோ நம: ॥

# அம்ருதலஹரீ


| தொகுதி | விக்ரம, ஆவணி | பகுதி |
|---|---|---|
| 2 | 10—9—40 | 12 |


अनवद्यहृद्यसूक्तीर्दधती सुमनोमनोविनोदाय ।
अमृतलहरी प्रसर्पतु सततं श्रीरङ्गचन्द्रमस्सविधात् ॥

## ஆண்டு நிறைவு அறிக்கை.

அன்பார்ந்த ஆரியர்காள்!

இப்போது நமது லஹரிக்கு இரண்டு பிராயம் நிரம்புகின்றது. அடுத்த திங்களில் மூன்றாவது பிராயம் தொடங்குகின்றது. எம்பெருமானது இன்னருளாலும் பரம பாகவதர்களது பரம க்ருபையினாலும் இடையூறென்றுமின்றி இவ்விரண்டு பிராயமும் கடந்ததற்கு ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் முழுவதும் பேருவகை கொள்ள ப்ராப்தம்.

வித்வான்களும் ரஸிகர்களும் விரும்பி வாசிக்கக்கூடிய வியாஸங்களை இயன்ற வரையில் வெளியிட்டு வந்து அவரவர்களை யதோசிதம் மகிழ்வித்ததாகவே கொண்டு யாமும் களிக்கின்றோம்.

அடுத்த திங்களில் இதற்குப் புது பிராயப் பிறப்பாதலால், இப்பத்திரிகையின் அமைப்பில் புதிதானவொரு சிறப்பு ஏதேனும் செய்விக்க வேண்டுமென்கிற குதூஹலம் நமக்கு மிகவுமுண்டு, ஆனாலும் எதுவும் அர்த்த ஸாத்யமாயிருப்பதாலும், தற்காலம் அரசாங்கப்

போர் மிகையினுல் காகிதம் முதலிய எல்லாப் பண்டங்களும் விலையேறி யிருப்பதாலும், சந்தாதாரர்கள் உதவி செய்ய இன்னும் மனங்கொள்ளாதிருப்பதாலும் பலவகை ஸௌகரியக் குறைவை உத்தேசித்துப் புதிய பரிஷ்காரமொன்றும் இப்போது செய்வதற்கில்லாமையையும், யதாரீதியாகவே மேலும் வெளிவருமென்பதையும் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேம். ஆனல், விஷய விந்யாஸங்களில் மாத்திரம் சில பரிஷ்காரங்கள் செய்ய விருப்பமுண்டு. அதாவது, பத்ரிகை தோறும் (1) ஶ்ரீராமாயணப்பகுதி, (2) பகவத் விஷயப்பகுதி, (3) சரித்திரப்பகுதி, (4) ரஹஸ்யப்பகுதி, (5) நல்வார்த்தைப்பகுதி என மகுடங்கள் இட்டு ஶ்ரீராமாயணம் முதலியவற்றிலிருந்து இன்சுவை மிக்க விஷயங்கள் எளிய நடையில் தெளிவாக எழுதி வெளியிடப்படும். இத்தகைய வெளியீடுகள் இது வரையிலும் நடந்து வந்தாலும் இனி வரும் வெளியீடு நியமமாகவும் தொடர்ச்சியாகவும் நடைபெறு மென்றுணர்க.

இக்காலத்தில் விகடப் பத்திரிகைகளுக்கே ப்ரசாரம் அதிகம் என்பதும், இத்தகைய பத்திரிகைகளை அன்புடன் ஆதரிப்பார் யாரோ சிலர் என்பதும் அனைவருமறிந்ததே. இப்போது இப்பத்திரிகைக்கு சந்தாப்பணம் உதவி ஆதரிப்பவர்கள் எத்தனை பேர்கள்? என்று கேட்டால் இதன் விடையை வெளியிடுவதற்கு வெள்க வேண்டியதாகவே யிரா நின்றது. நாம் ஆங்காங்கு நேரிற் சென்று நிர்பந்தித்துச் சந்தாப்பணம் வசூல் செய்ய ஸௌகரியமற்றவர்களாதலால் "கிருபை செய்து சந்தாப்பணத்தை அனுப்ப வேணும்" என்று லஹரியின் வாயிலாகவே பிரார்த்திப்பது தவிர வேறென்றும் செய்யகில்லோம். அந்த ப்ரார்த்தனையைப் பலகால் கடாக்ஷித்தும் "இது நமக்கன்று; வேறு யாரைப் பற்றியோ எழுதினது போலும்" என்றே ஒவ்வொருவரும் நினைத்து விடுவதாகத் தெரிகிறது. இப்படியானல் லஹரி எங்ஙனே நடைபெறு மென்பதை ஸஹ்ருதயர்கள் கிருபை கூர்ந்து ஆலோசிக்க வேணுமே.

கடந்த இரண்டு வருஷங்களுக்கும் அடியோடு சந்தா செலுத்தாதவர்கள் பலர். முதல் வருஷத்திற்குச் செலுத்தி இரண்டாவது வருஷத்திற்குச் செலுத்தாதவர்கள் பலர். அன்னவர் யாவரும் பரம கிருபையுடன் மணியார்டர் மூலம் சந்தாத் தொகையை அனுப்பி ஆதரிக்க வேணுமென்று அர்த்திக்கின்றேம்.

---



# பெரியவாச்சான் பிள்ளை சாத்துமுறை.

சென்ற இதழில் தெரிவித்திருந்தபடி ஶ்ரீகாஞ்சீ நம்பிள்ளை ஸன்னிதியில் சென்ற திருவோணம் முதலாகப் பத்துநாள் பெரியவாச்சான் பிள்ளைக்கு வருஷோத்ஸவம் நடைபெற்று "ஆவணியில் ரோஹிணி நன்னாளில்" வெகு விபவமாகச் சாத்து முறை யுத்ஸவம் நடைபெற்றது. கச்சிப்பதியில் திருவெஃகா நாயனர் என்று ப்ரஸித்திபெற்ற ஶ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் மாலை 5மணிக்குப் பெரிய புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸந்நிதிக்கு எழுந்தருளி இரவு 9-மணிக்கு சாத்து முறை கோஷ்டி வெகு சிறப்பாக முடிந்தது. அதன் பிறகு நம்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை மூன்று திருநாமங்களுக்கு ஶ்ரீயதோக்தகாரி யெம்பெருமானுடனே மாடவீதிப் புறப்பாடு நடந்து எம்பெருமான் திருவெஃகாவில் சேர்ந்து நம்பிள்ளைகளுக்கு பஹுமாநம் ப்ரஸாதித்தருள, ஸ்தோத்ரபாட கோஷ்டியுடனே நம்பிள்ளைகள் ஸந்நிதிக்கு மீண்டெழுந்தருளி யாயிற்று. சென்ற கார்த்திகைத் திங்களில் திருப்ரதிஷ்டை நடந்த காலத்து வைபவத்திலும் வீறு பெற்றதாகவே நடந்தேறியது.

சாத்துமுறை ஸமயத்தில் பெரியவாச்சான் பிள்ளை வைபவமும் சுருக்கமான உபந்யாஸமாக விண்ணப்பம் செய்யப்பட்டது. அதன் ஸாரஸம்ஸம் சிறிது இங்கு வெளியிடப்படுகின்றது.

ஶ்ரீவைஷ்ணவ வுலகுக்குப் பேராசிரியரான பெரியவாச்சான் பிள்ளையினுல் இவ்வுலகுக்கு விளைந்த மஹோபகாரங்கள் மிகப் பெரியன. ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கெல்லாம் மிகச் சிறந்த வியாக்கியானமும், ஶ்ரீராமாயணத்தில் பல பல ச்லோகங்களும் இன்சுவையே வடிவெடுத்த வியாக்கியானமும், ஆளவந்தாருளிய ஸ்தோத்ர ரத்நத்திற்கு உருக்கமான வியாக்கியானமும் சில ரஹஸ்யார்த்த க்ரந்தங்களும் முதலானவை இவ்வாசிரியர் அருளிச் செய்தவையாகும்.

நம்பிள்ளை யென்கிற லோகாசார்யரின் திருவடி வாரத்தில் நெடுநாள் பரிசர்யை பண்ணிப் பெற்ற விசேஷார்த்தங்களையே

இவ்வாசிரியர் தமது திவ்ய க்ரந்தங்களில் அமைத்தருளினர். இவர் தாம் நம்பிள்ளையைப் பற்றி ஓரிடத்தில் அருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் நினைவுக்கு வருகின்றன; அவற்றை இங்குக் குறிப்பிடுவோம்; பெரிய திருமொழியில் (5–8–7) "அந்தணனொருவன்" என்றவிடத்து வியாக்கியானத்திலே— "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாச புராணங்களையும் அதிகரித்து பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாய மீமாம்ஸைகளும் அதிகரித்து போது போக்கும அருளிச் செயலிலேயாம் பிள்ளையைப் போலே ........" என்றருளிச் செய்தார். இதனால், நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே அதிகரித்து அந்தப் பாண்டித்யம் முழுவதையும் அருளிச் செயற் பொருளுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்தி வந்தாரென்பது விளங்கும். அவ்வண்ணமாகவே பெரியவாச்சான் பிள்ளையும் ஸகல சாஸ்த்ரஜ்ஞராகித் தமது ஞான விளக்கத்தை வியாக்கியானங்களருளிச் செய்வதில் வெகு அழகாகச் செலுத்தி இவ்வுலகுக்கு மஹோபகாரர்களில் ப்ரதமஸ்தானம் பெற்றருளினர்.

திவ்யப் பிரபந்தங்களுக்கு வியாக்கியான மிட்டருளும் திருப்பணியில் மற்றுஞ் சில ஆசாரியர்களும் கைவைத்ததுண்டு. ஆனால் பூர்த்தியாக நாலாயிரத்திற்கும் வியாக்கியானமிட்டருளினவர் என்னும் பெருமை இவ்வாசிரிய ரொருவர்க்கே அஸாதாரணமாக அமைந்ததாகும். இவ்விஷயம் உபதேசரத்தினமாலையில், "பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்கும் தெரிய, வியாக்கியைகள் செய்வால்— அரிய, அருளிச் செயல் பொருளை ஆரியர்கட்கிப்போது, அருளிச்செயலாய்த தறிந்து," "நஞ்சீயர் செய்த வியாககியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே—நஞ்சீரால், வைய குருவின் தம்பி மன்னு மணவாள முனி, செய்யுமவை தாமுஞ் சில" என்ற பாசுரங்களினாலும் உணரத்தக்கது. பெரியாழ்வார் திருமொழியில் நானூறு பாசுரங்களுக்கு மாத்திரம் இவ்வாசிரியர் தம் வியாக்கியானம் லுப்தமாயிருந்ததென்றும், மணவாள மாமுனிகள் பலருடைய பிரார்த்தனைக் கிணங்கி அக்குறையைத் தாம் நீக்கியருளினரென்றும் ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர் பகர்வர்.



"கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்து" என்கிறபடியே பரம காருணிகனான ஸர்வேச்வரன் இவ்விருள் தருமா ஞாலத்துக்கு அணிவிளக்காக அநேக விதமான சாஸ்த்ரங்களை உபகரித்தருளினன். அவற்றுள் வேத சாஸ்த்ரமே மூலப்ரமாணம். அது வடமொழி வேதமென்றும் தென்மொழி வேத மென்றும் பாகுபாடுற்றது. வடமொழி வேதத்திற்கு வித்யாரண்ய ஸ்வாமிகள் பல பண்டிதர்களை வைத்துக் கொண்டு பாஷ்யம் அவதரிப்பித்தார். இவ்வுலகுக்கு அது வொரு மஹோபகாரம். அந்த வடமொழி வேதத்திற் காட்டிலும் பலவகையினும் சிறப்புப்பெற்ற தமிழ் வேதத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை பரமரஸ பரிபூர்ணமான வியாக்கியான மிட்டருளினது யாவர்க்கும் கைம்மாறிலாத பேருதவியாகும்.

இவ்வாசிரியரின் வியாக்கியான சைலி அநுபவிக்க அநுபவிக்க அனைவரையும் ஆனந்தக் கடலில் அமிழ்த்துவதாகும். மற்றையோர் பத்தெட்டு வாக்கியங்களினால் விரியவுரைக்கும் பொருளைச் சிறியதொரு வாக்கியத்தினால் மிக அழகாக அருளிச் செய்து வைக்குந் திறம் இவர்க்கு அஸாதாரணமானது.

கடல் ரத்நாகர மென்று பெயர் பெற்றிருத்தல் போல இவ்வாசிரியரது வியாக்கியானக் கடல் எண்ணிறந்த விசேஷார்த்த ரத்ந நிதியாகப் புகழ் பெற்றுள்ளது. ஆளவந்தார் எம்பெருமானார் பட்டர் நஞ்சீயர் முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செயல்களுக்கு ஆங்காங்கு அழகாக நிர்வஹித்துக் கொண்டிருந்த அர்த்த விசேஷங்களை இவ்வாசிரியர் நமக்கு எடுத்தூட்டியிருக்கின்றாராதலால் ஸகல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி ஸாரம் இவருடைய வியாக்கியானங்கள் என்னத் தகும்.

அவ்வர்த்த விசேஷங்கள் அடைவே வெளிவரும்.

---

இன்றே அம்ருதலஹரிக்கு சந்தாதாரர்களாகச் சேர்ந்து உதவி செய்யுங்கள்.

ஸ்ரீ:

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கர மடாதிபதி

ஸ்ரீ ஜகத் குரு

# அனந்தாசார்ய ஸ்வாமி.

அநந்தஸூரயே காந்த நிரபாய தயாப்தயே ।
ஜகதாம் குரவே ஹ்ருத்யகுணாப்தயே மம மங்களம் ॥

—ooꕥoo—

"ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும் ।
மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச் சாஸ்த்ரபாணிநா ॥"

என்றும் "பீதகவாடைப் பிரானர் பிரம குருவாகி வந்து" என்றுஞ் சொல்லுகிற படியே இந்நிலவுலகத்தைத் திருத்திப் பணி கொள்ள விரும்பு மெம்பெருமான் உசிதஸமய விசேஷங்களிலே ஆசார்ய ரூபமாகத் திருவவதரித்து வருமடைவிலே, எம்பெருமானர் நியமித்தருளின எழுபத்திநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளில் ஒருவரான முடும்பை நம்பியின் திருவம்சத்தில் தோன்றினவரும், மணவாள மாமுனிகள் நியமித்தருளின அஷ்ட திக்கஜங்களில் ஒருவருமான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவின் ஸந்ததியிலே, கலி வரு 4975 ஸ்ரீமுக ஸம்வத்ஸரத்தில் மாசி தன்னிற் சோதி யென்னும் நன்னாளில் ஸ்ரீ க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரராகத் திருமலைத் திருப்பதியில் மாதுல க்ருஹத்தில் திருவவதரித்து நாடு புகழும் பரிசினால் நன்றாக ஸ்ரீமதநந்தார்ய ஸ்வாமி யென்றும் ஜகத்குரு வென்றும நாற்றிசையும் நவிலப் பெற்று விளங்கி வந்தமை உலகமறிந்தது.

இந்த ஸ்வாமி தமது மாதுலரும் ஜகத் ப்ரஸித்த வித்வச் சிகாமணியாக விளங்கி நின்றவருமான திருமலை அநந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் திருவடிவாரத்திலே வாழ்ந்திருந்து தர்க்க வ்யாகரணாதி ஸகல ஸாமாந்ய சாஸ்த்ரங்களையும் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி அத்யாத்ம சாஸ்த்ரங்களையும்



ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கர
காதி ஸ்ரீ கிருஷ்ணமாசாரியஸ்வாமி
(ஜகத்குரு ஸ்ரீமதநந்தார்யஸ்வாமி திருத்தகப்பனுர்.)



ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கர மடாதீச ஜகத்குரு
ஸ்ரீமத் அனந்தாசார்யஸ்வாமி



ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

காதி. கிருஷ்ணமாசாரியார்

(ஜகத்குரு ஸ்ரீமத் அநந்தாசார்யஸ்வாமி திருக்குமாரர்.)

அடைவே அதிகரித்து மஹா மேதாவியாய் ஸர்வதோ முக ஜ்ஞாந ஸாம்ராஜ்ய ஸம்பந்நராய்

"விம்ஶத்யப்தே விஶ்ருததாநாவித்யவித்ய:"

என்றுப் போலே இருபது திருநக்ஷத்திரத்திலே நாநாவித வித்யைகளிலும் விசாரதராய் வாழ்ந்தருளா நிற்க;

உத்தர பாரதத்தில் தமது முன்னோர்களின் திருவடி ஸம்பந்திகள் பலருண்டாதலால் அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி முதல் முதலாக (கி. பி.) 1895-ம் ஆண்டில் வடதேச யாத்ரை யெழுந்தருளி பதரிகாச்ரமம் பர்யந்தமாக மங்களாசாஸநஞ் செய்தருளி அத்யந்தம் அதிசயித சிஷ்ய ஸம்பத்துடனே 1898-ம் ஆண்டில் பெருமாள் கோயிலுக் கெழுந்தருளி, ஸந்நிதி வீதியில் புராதனமாயிருந்த தமது திருமாளிகையை மஹித மஹாப்லவந ப்ரக்ரியையிலே உத்தரித்து, குல தநமான ஸ்ரீ வேணுகோபாலனை விசேஷ விபவங்கள் பொலிய ஆராதித்துக்கொண்டு, திருவடி பணிந்த ஸ்ரீ வைஷ்ணவர்கட்கு ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை ப்ரவசநம் செய்து கொண்டு வாழ்ந்தருளா நிற்கையில், அறிவினால் குறைவில்லா அகன்ஞாலமென்ற இவ்வுலகின் கண் விலக்ஷணமான சாச்வத வித்யோபகாரங்களைச் செய்தருள விரும்பி, வேதாந்த வைஜயந்தீ என்கிற ஸம்ஸ்க்ருத பாடசாலையை ஸ்தாபித்தருளியும் ஸ்ரீ ஸுதர்சந முத்ராக்ஷரசாலை யென்கிற அச்சுக்கூடத்தை அமைத்தருளியும் தம்முடைய ஜ்ஞான விஜ்ஞான ஸம்பத்தியை உலகுக்குப் பெரிதும் பயன்படச் செய்யத் தொடங்கினார்.

அச்சுக்கூடத்தில் ஸ்ரீ ஸ்வாமி வெளியிடுவித்தருளிய ப்ராசீந க்ரந்தங்களும் ஸ்வப்ரணீத க்ரந்தங்களும் இவ்வுலக மெங்கும் பரவியிருக்கின்றன. தர்க்க வ்யாகரண தந்த்ர வேதாந்த பாஞ்சராத்ர இதிஹாஸ புராணாதிகளில் ஸ்ரீ ஸ்வாமி பரிஷ்கரித்து ப்ரகாசிப்பித் தருளியிருக்கும் க்ரந்தங்கள் ஒவ்வொன்றும் மிக முக்யமானவை. தர்க்க சாஸ்த்ரத்தில் ப்ராமாண்ய வாதாந்த முள்ள வாத க்ரந்தங்களத்தனையும் தேவநாகர லிபியில் ஸுஸம்ஸ்க்ருதமாக ஸ்ரீ ஸ்வாமியால்தான் முதன் முதலாக முத்ரிதமாயின.

பாட்ட ரஹஸ்யம், மீமாம்ஸா கௌஸ்துபம், ஸேச்வா மீமாம்ஸை, மீமாம்ஸா பாதுகை இத்யாதிகளான மீமாம்ஸா சாஸ்த்ர ப்ரபந்தங்களும், ஸ்ரீ ஸ்வாமியால்தான் பரிசோதிக்கப்பெற்று ப்ரகாசிதமாயின. சண்டமாருத வ்யாக்யானத்துடன் கூடிய சத தூஷணீ, பாராசர்ய விஜயம் பகவத கீதைக்கு அபூர்வ வ்யாக்யானங்கள், மைஸூர் அநந்தாழ்வாருடைய வாதார்த்த க்ருதிகள் முதலான வேதாந்த உத்க்ரந்தங்களும் ஸ்ரீ ஸ்வாமியால் தான் சீர்மைபெற்று ப்ரகடிதமாயின. இங்ஙனே நூற்றுக் கணக்கான அத்யாவச்யக சாஸ்த்ரீய க்ரந்தங்களைப் பரிசோதித்து ப்ரகாசிப்பித் தருளினது மன்றியில், புருஷ ஸூக்த பாஷ்யம், வால்மீகி பாவ தீபம், ஐக சாஸ்த்ர்ய மீமாம்ஸை இத்யாதிகளான பல சிறந்த க்ரந்தங்களையும் ஆவச்யகதைக்கு இணங்கியவாறு தாம் அருளிச் செய்து உபகரித்தருளினர்.

இவையுமல்லாமல், மஞ்ஜு பாஷிணீ என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையை ப்ரசாரிக்கத் தொடங்கி, சில மாதம் மாஸிக பத்ரிகையாகவும் சில வருஷம் பாக்ஷிக பத்ரிகையாகவும் பல வருஷங்கள் ஸாப்தாஹிக பத்ரிகையாகவும் ஆக முப்பத்திரண்டு வருஷ காலம் தத் ஸம்பாதகம் செய்தருளியிருக்கிறார். வநமாலிகா, ப்ரஹ்ம வித்யா என்கிற இரண்டு தமிழ்ப் பத்திரிகைகளையும் ப்ரசுரித்தருளினார். வைதிக ஸர்வஸ்வ மென்கிற ஹிந்தி பாஷா மாஸிக பத்ரிகையை இருபத்தைந்து வருஷ காலம் நடத்தி வந்தார். இவ்விதமாகப் பல வழிகளில் ஜ்ஞாந ப்ரதாநமும் தர்ம ப்ரசாரமும் ஸ்ரீ ஸ்வாமி உலகுக்குச் செய்தருளின முறைமை விலக்ஷணமானது.

ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி, மார்வாடி, மஹாராஷ்ட்ரம், ஆங்கிலம், முதலிய பல பாஷைகளில் சிறிது மாயாஸமின்றிப் பண்டிதர்க்கும் பாமரர்க்கும் ஒருங்கே பயன்படுமாறு நாலைந்து மணி காலம் நீண்ட அழகிய அரிய பெரிய உபந்யாஸங்களைச் செய்தருளும் வல்லமை ஸ்ரீ ஸ்வாமியிடத்தில் அற்புதமாகக் குடிகொண்டிருந்தது. 'க்ரந்தங்கள் எழுதக் கற்றவர்கட்குப் பேசத் தெரியாது, பேசப் பயின்றவர்கட்கு எழுதத் தெரியாது' என்று பெரும்பான்மையாக வுள்ள அப ப்ரதை ஸ்ரீ ஸ்வாமி திறத்தில் மிக ஒதுங்கி நிற்பதாம். எந்தப் பாஷையிலும் எந்த விஷயமாகப் பேசப் புகுந்தாலும் "இந்த வொன்று தானே இவர் பயின்றது!, இதுவேயோ இவர் கற்றது!" என்று நினைக்கும்படியாகவும், "சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல் இன்மையறிந்து" என்ற குறட்காரர் கட்டளையிட்டபடியும் பிறர் ஒரு குற்றங் குறை கூறுவதற்கு இறையுமிடமின்றியே உபந்யஸிக்குந் திறமை வேறெங்குங் கண்டதில்லையென்று பல பல மேதாவிகளும் மதித்துப் போற்றியுள்ள விஷயத்தை அடியேன் சிறிய ஞானத்தன் அறைதற்கு அர்ஹனல்லேன்.



இத்தகைய உபந்யாஸங்களினால் அங்க வங்க களிங்க காம்போஜ காச்மீர காமரூப ஸௌவீர ஸௌராஷ்ட்ராதி ஸகல தேசங்களையும் ஸ்ரீஸ்வாமி ஸஞ்சார முகத்தாலே புனிதமாக்கியருளியிருப்பதால் இப்பெருமைகளைத் தெரிந்து கொள்ளாத நாட்டினர் மிகுதியாக இரார்களென்றெண்ணுகின்றேன்.

ஸ்ரீஸ்வாமி 1912 ஆம் வருஷத்தில் ஜகத்குரு ப்ரப்பா விப்பாதியுடனே ஸௌவர்ண சிபிகா ரத கஜ துரக பரிஜனபரிபார்ஹபரிகர்மிதராய்ப்புறப்பட்டருளி நீண்டகாலம் திகந்த ஜைத்ர யாத்திரை செய்தருளுங் காலத்திலே வட இந்தியாவில் பல பல பகுதிகளில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய விஜய த்வஜம் நாட்டப்பட்டு ஆயிரக்கணக்கான புறமதத்தவர்களும் திருத்திப் பணிகொள்ளப்பட்டு "[illegible]" என்ற மங்களசாஸநம் மிகுதியாக மாட்சிமை பெறுவிக்கப்பட்டது. நாநா மதாந்தஸ்த பண்டித பரிப்ருடர்கள் ஆயிரக் கணக்காக மலிந்திருக்கப் பெற்றதான காசிமாநகரத்தில் ஸ்ரீஸ்வாமி எழுந்தருளி நிர்ப்பயமாகவும் நிஸ்ஸங்கோசமாகவும் ஸித்தாந்த ப்ரசாரம் செய்தருளினபோது அஸஹிஷ்ணுக்களான அங்குள்ள பண்டிதர்களால் வாத ப்ரதிவாதங்கள் கிளப்பப்பட்ட காலத்து, ஸ்ரீஸ்வாமி அவர்களுடைய துர்வாதங்கட்கெல்லாம் வாசிகமாகவும் ஸத்ய: ப்ரணீத ப்ரபந்தங்களாலும் ப்ரத்யாக்யாநம் செய்தருளினதுமல்லாமல், தென் திசையில் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்தைப் பாதுகாக்கவல்ல பண்டிதர்கள் பலருளர் என்பதையும் அங்குள்ளார்க்கு மூதலித்துக் காட்டவேண்டி அநேக திவ்ய தேசங்களிலிருந்து வித்வான்களையும் வரவழைத்தருளி உபந்யஸிப்பித்து ப்ரதிபக்ஷிகளைப் பாற்றியருளின பெருமை 'எம்பெருமானுடைய அபராவதாரமே யிவர்' என்னுந் தகுதியைநன்கு நிலைநாட்டவற்றாயிற்று.

ஸ்ரீ ஸ்வாமி அநேக ராஜதானிகளில் ஸ்ரீ வைஷ்ணவ மஹா ஸம்மேளநங்களை நடத்தியருளி ஸநாதன தர்ம ஸம்ரக்ஷணம் செய்தருளும் பரிசும் பெரியதே. பம்பாய், கல்கத்தா, ப்ரயாகை, புரீ ஜகந்நாதம், ஷோலாபூர், ஜாவரா, ப்ருந்தாவனம், புஷ்கரம் ஹைதராபாத், பக்ஸர் முதலிய மஹா நகரங்களில் இருபத்தைந்து வருஷ காலமாக அடிக்கடி ஸ்ரீவைஷ்ணவ மஹா ஸம்மேளநங்களை நடத்தி லக்ஷக் கணக்கான பணச் செலவுகளைச் செய்வித்து நாநா தேசத்துப் பண்டிதர்களையும் திரட்டி தர்ம ஸம்பந்தமான உபந்யாஸங்களை நடத்தி இவ்வழியாலே ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மீ ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகத்தை நாடு நகரமும் நன்கறிய ஸ்ரீ ஸ்வாமி செய்தருளியிருக்கும் மாண்பு அப்போதைக்கப்போது பல பல வ்ருத்தாந்த பத்ரிகைகள் வாயிலாக அனைவரு மறிந்ததேயாம். இத்தகைய ஸ்ரீவைஷ்ணவ மஹா ஸம்மேளநங்கள் இதுவரையில் ஸ்ரீ ஸ்வாமியால் பதினேழு நடத்தப்பட்டுள்ளன.

உதயபூர் மஹா ராஜா, ஜோத்பூர் மஹாராஜா, க்வாலியர் மஹாராஜா, பாலன்பூர் நவாப், ஹைதராபாத் நவாப், ஜாலராபாடன் மஹாராஜா, புந்தீ மஹாராஜா, சீகர்ராவ் ராஜா, திருவாங்கூர் ராஜா, கிரோல் ராஜா, ஜூநாகட் [காதியாவாட்] மஹாராஜா, வளா ராஜா, வடவான் நவாப், போரபந்தர் ராஜா, தாரா மஹாராஜா, ஜாவரா நவாப், ரதலாம் மஹாராஜா—என்றிப் பெயர் கொண்ட பல மஹாராஜர்களால் ஸ்ரீ ஸ்வாமி ஸத்கார பஹுமாநங்கள் பெறுவிக்கப்பெற்று

யஸ்யாம் வீர ஹவ: விஜயநகராதீசா ஶ்ரீஹஸ்திஷா
ஸேவந்தே ஹஸ்திஸ்தந்ஹோநாநந்யா ஹஸ்தா ஸேஸ்யாஜ்ஞா:

என்னும்படியே வீறு பெற்று விளங்கும் வாய்ப்பும் விச்வ ப்ரஸித்தம்.

ஸ்ரீ ஸ்வாமியின் ப்ரபிதாமஹராய்ப் பெரிய அநந்தாசாரியர் ஸ்வாமி யென்று புகழ் பெற்ற மஹாநுபாவரே முதன் முதலாக வடநாடுகளில் எழுந்தருளி நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை ஆங்காங்குப் புகவிட்டவர். அக்காலத்தில் அங்கு அங்குரிதமான ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷ்மீ ஸாம்ராஜ்யமானது இவருடைய பிதாமஹரின் காலத்தில் பல்லவிதமாகி, திருத் தகப்பனருடைய காலத்தில் கோரகிதமாகி, இந்த ஸ்வாமியின் முதல் யாத்ரையிலே புஷ்பிதமாகி, அடுத்த மஹா யாத்ரைகளில் பலிதமாகப் பெற்ற பெருமேன்மைகளை நோக்குங்கால், "கலியுங் கெடுங் கண்டு கொண்மின்" என்ற ஆழ்வாருடைய திருவாக்கில் இலக்கு இவ்வளவும் வருகின்றது என்றே அறுதியிடலாம்.



உலகில் ஸம்ப்ரதாய ப்ரசாரத்திற்காக முயற்சி செய்பவர்கள் பற்பலர் இருப்பினும் ஒவ்வொருவருடைய முயற்சி ஒவ்வொரு நெறியிலேயே சென்று கொண்டிருக்குமென்பதே நாம் பெரும்பாலுங் காண்பதாகும். ஸர்வதோ முகமான ஸாஹித்யசாஸ்த்ராதிஜ்ஞாநங்களையும் பல பாஷைகளிற் பயிற்சியையும் உபதேச ஸாமர்த்தியத்தையும் ஒருங்கே பெற்றிருக்குமவர்கள் மிகச்சிறு கணக்குக்குள்ளாவர். இவை ஒருவாறு வாய்ப்பினும், (1) ஆவச்யகாநேக ப்ராசீந க்ரந்த பரிஷ்கரண ப்ரகாசநம், (2) ஸமயோசித அபூர்வ க்ரந்த ப்ரணயநம், (3)நாநா பாஷைகளில் பத்ரிகாப்ரகாசநம் (4)ஸமுத்ர ஸலிலத்தைப் பருகின மேகம் போலே நாடெங்கும் ஸஞ்சரித்து அர்த்த விசேஷங்களை வர்ஷித்தல், (5) வாக்யார்த்தங்கள் நடத்தி ப்ரதிபக்ஷிகளை வெல்லுதல், (6) பலவிடங்களில் அடிக்கடி மஹா ஸபைகள் திரட்டுதல், (7) மஹாராஜர்களுடைய அபிமானத்திற்கும் இலக்காகி அவர்களையும் சீர்திருத்தல்—என்கிற இத்தனை சிறப்புக்களும் ஒரு வ்யக்தியில் அமைவதென்பது ஸ்ரீ ஸ்வாமியிடத்திலன்றி வேறெவ்விடத்தும் எக்காலத்திலும் காணக் கிடைக்காவென்னுமிடம் ஈஷத்தும் அதிசயோக்தியாகாது.

இத்தனை சிறப்புக்களுக்கும் சிகரமாக ஸ்ரீஸ்வாமி வட இந்தியாவிற் பல விடங்களில் திவ்ய தேச ப்ரதிஷ்டைகள் செய்தருளியிருக்குந் திறனும் அதிமாநுஷ சேஷ்டிதமென்னவுரியதே. மாளவ தேசம், மார்வாட தேசம் முதலிய விடங்களில் அநேக மந்திரங்களும் ஸந்நிதிகளும் அமைத்தருளினது இருபது முப்பது வருஷங்களுக்கு முன்பாகும். ஸமீப காலத்தில் பம்பாய் மஹாராஜதானியில் பனஸவாடி யென்னும் பகுதியில் அநேக லக்ஷம் ரூபாய்ச் செலவினால் திருவேங்கடமுடையான் ஸந்நிதியை ப்ரதிஷ்டிப்பித்து ப்ரஸித்த திவ்யதேசங்களிற் போலவே விசேஷ விபவங்களுடன் பாஞ்சராத்ர... ஆராதநங்களும் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்

வத்ஸரோத்ஸவங்களும் நடைபெறுமாறு சாச்வதிக வ்யவஸ்தைகள் செய்தருளியிருக்குமடைவும், அதிவிலக்ஷண ப்ராகார கோபுர மண்டப வாபீ கூப தடாக வாஹந திவ்ய பூஷண பரிச்சதாதிகளை ஒழுங்கு படுத்தி யிருக்கும் சீர்மையும், நெஞ்சால் நினைப்பதரிது. ஸ்ரீ காஞ்சியிலும் ஏற்கனவே ப்ரதிஷ்டிதமாயிருந்த ஸ்வ குல கூடஸ்த ப்ரதிவாதி பயங்கராசார்ய ஸந்நிதியை ப்ராகார கோபுராதிகளுடன் விசேஷத் திருப்பணிகள் நடத்தி உத்தரிப்பித்தும் திருநாங்கூர்த் திருப்பதிகளில் ஒன்றான வண்புருஷோத்தமத்தில் நின்றும் ஒரு பேர மூர்த்தியை அங்கு எழுந்தருளப் பண்ணி வைத்தும் நித்யமும் இரண்டு வேளையிலும் தேசாந்தரி ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆராதிக்க உபபத்திகள் சேமித்தும் நடத்திப் போருகிற கார்ய விசேஷங்கள் நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு கனிய நிற்கும்.

இப்படி மஹா வைபவத்துடனே இந்த விபூதியில் அறுபத்திரண்டு திருநக்ஷத்திரம் எழுந்தருளி யிருந்த இம்மஹாசார்யர் தாது ஸம்வத்ஸரம் ஆடி மாதத்தில் திருநாட்டுக் கெழுந்தருளினார். ஆனாலும் "யஶ:காயேந ஜீவதி" என்கிற முதுமொழி இந்த ஸ்வாமி யொருவர்க்கே அஸாதாரண மென்பது உலகமறியும்.

இந்த ஸ்வாமியின் திருத்தகப்பனார், திருக்குமாரர், இந்த ஸ்வாமி ஆக மூவருடையவும் திருவுருவப் படங்களை இவ்விதழில் ஸேவிக்கப் பெறுகின்றீர்கள்.

# சில அமுத மொழிகள்.

நாம் நம்முடைய தோஷங்களையே எப்போதும் அநுஸந்தானம் செய்து கொண்டிருக்க வேணுமென்று பெரியார் உபதேச முகத்தாலும் ஸ்வாநுஷ்டான முகத்தாலும் உணர்த்தியுள்ளார்கள். நாம் அதை மறந்து நம்மிடத்தில் இல்லாத குணங்களையே வெளியிட்டுக் கொண்டும் குற்றங்களை மறைத்துக் கொண்டும் தவறுதலாகப் போதுபோக்கி வருகிறோம். இந்நிலைமையில் நமது குற்றம் குறைகளை உண்மையாகச் சிலர் எடுத்துரைத்தால் அதனை மஹோப



காரமாகக் கொள்ளுவதே விவேகிகளின் பணியாகும். உண்மையில் அதனில் விஞ்சிய மஹோபகாரம் வேறு என்ன வுளது? அவர்களுக்கு உபய விபூதியையும் பரிசளித்தாலும் போதாதே. நம்முடலில் தோன்றும் விரணம் முதலியவற்றிற்கு சிகித்ஸை செய்பவர்கள் தற்காலத்தில் நமக்கு எவ்வளவோ கொடுமையை விளைத்தாலும் அதை நாம் நன்மையாகவே கொண்டு நூறுமாயிரமும் பரிசளிப்பது போலவே நிந்தனை செய்பவர்களுக்கும் வாஸ்தவமாய் எவ்வளவோ பரிசளிக்கவேண்டும்.

நிந்தனை செய்வாரை நிச்சலும் பூஜிக்கவேணுமென்பதே நற்கொள்கை. பூஜிக்க ஸௌகரியப்படாவிடினும் அவர்கள் செய்யும் நிந்தனைப் பிரசாரங்களைத் தீமையாகக் கொள்ளாமல் நன்மையாகவே கொண்டு நெஞ்சில் உபகாரஸ்ம்ருதி நடந்தால் அவ்வளவே போதுமானது. ஸ்ரீவசந பூஷண திவ்ய சாஸ்திரமாகிற ரத்நாகரத்தில் ஒரு ரத்னமே எப்போதும் நாம் கண்டத்தில் தரிக்கத்தக்கது. அதாவது—"குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்கிற ஸ்ரீஸூக்தியாம். இவ்விடத்தில் மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளின் போக்யதை அளவிட முடியாதது. இங்கு ஆய்ப்படியில் பட்டருடைய ஐதிஹ்யமொன்று விவரிக்கப்பட்டிருக்கின்றது. பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே சென்றிருந்த போது சிலர் வாசாமகோசரமாக தூஷித்தார்களாம்; அதைக்கேட்டு பட்டர், அணிந்திருந்த திருவாழி மோதிரத்தைக் கழற்றி அந்த தூஷகருக்குப் பரிசளித்துவிட்டு முதலிகளைப் பார்த்து ஸாதித்தாராம்—இவர்கள் தூஷித்ததற்கு அஞ்சிக் கொடுத்தேனன்று, நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்துக்காகக் கொடுத்தேனத்தனை; இவர்கள் செய்த உபகாரத்துக்கு நாமுகந்தைக் கொடுக்கப்பெறுமே? க்ராமஸூகாமுகந்தைக் கொடுப்பாரைப்போலே இவர்களுகப்பைப் பின்சென்று இதைக் கொடுத்தேனத்தனை—என்றாராம்.

தேசிகன் ஸாதித்த ஸங்கல்ப ஸூர்யோதய நாடகத்தில் ஐந்தாவது அங்கத்தில் அஸூயாதேவி யென்பவள் வந்து கூறு

கிற வார்த்தையை ஆசிரியர் அழகாக எடுத்து இயம்பியுள்ளார்;
விவேக சக்ரவர்த்திக்கு மஹாமோஹ மஹாராஜன் பகைவன்.
இவனுடைய மனைவிக்கு துர்மதி யென்று பெயர்; அவளுடைய
தோழிதான் அஸூயை யென்பவள். அவள் கூறுகின்றாள்—
" मयि दत्तावधानायां विश्वदोषापहारिणा । न शक्यमीश्वरेणापि निर-
वद्येन वर्तितुम्—மயிதத்தாவதாநாயம் விச்வதோஷாபஹாரிணா ! ந
சக்யமீச்வரேணாபி நிரவத்யேந வர்த்திதும்.." என்று. (இதன் பொ
ருள்.) அஸூயை யென்கிற நான் ஜாகரூகையாக இருந்தே
னாகில் ஒன்றான ஸர்வேச்வரனுங் கூட குற்றங்களிலிருந்து தப்பிப்
பிழைக்க முடியாது என்பதாம். இதற்கு மேல் "நிரவதி குணக்
ராமே ராமே" என்று தொடங்கி மிக அருமையான ச்லோக
மொன்று அந்த அஸூயா தேவியினால் சொல்லப்பட்டுள்ளது.
அதன் கருத்தாவது—குற்றம் என்பது லவலேசமும் காணமுடியா
மலும் அநந்த கல்யாண குண ஸமூஹமே வடிவெடுத்து மிருந்த
ஸ்ரீராமபிரானிடத்திலும் நாளைக்கும் பலவகைக் குற்றங்களைக் கூசா
மல் கூறிவருகின்ற இவ்வுலகத்தவர், மற்றையோரிடத்தில் எப்படி
வெறுமனே யிருப்பர்கள் ? குணக் கடலான எம்பெருமானே
படுகிறபாடு அதுவானால் ஏதோ ஒன்றிரண்டு குணங்களையும் பல்லா
யிரக்கணக்கான குற்றங்களையுமுடைய மற்றையோர் எப்பாடுபட
வேண்டும்?—என்பதாம்.

மஹான்களின் இத்தகைய அமுதமொழிகள் நம்போல்வாரான
புல்லியர்களின் அனுஷ்டானத்திற்கு வருவது மிகவும் அரிது.
சிரமப்பட்டு அனுட்டானத்திற்குக் கொண்டுவந்து விட்டால்,
[அதாவது, தூஷிப்பவர்களை உண்மையில் மஹோபகாரக
ளென்றே கொண்டு அவர்களிடத்து நன்றி பாராட்டப் பெற்றால்]
இதனில் மிக்க பேரின்பமில்லை. பிறர் செய்யும் தூஷணைகளினால்
யார்க்கு என்ன நஷ்டமுண்டாகுமென்பதொன்றையே விவேகிகள்
கவனிக்கவேண்டும். ஆமுஷ்மிகத்தில் எவ்வித நஷ்டமும் இவர்
களால் உண்டுபண்ண இயலாது. ஐஹிகத்தில் ஏதேனும் சிறிது
நஷ்டம் உண்டுபண்ணமுடியும் என்றே வைத்துக்கொண்டாலும்
அந்த நஷ்டத்தையே பரமலாபமாக நினைப்பது எவ்வளவோ நன்
மை. இதைத் தான் ஸ்ரீவசனபூஷண வியாக்யானத்தில் மண



வாளமாமுனிகள் வெகு அழகாக நிரூபித்தருளுகிறார். அந்த ஆசா
ரியர்களை நாம் உள்ளபடி வழிபடுகின்றவர்களாக இருப்போமானால்
அவர்களது உபதேச மொழிகளை மெய்யன்புடன் நாம் அனுட்டா
னத்திற் கொண்டு வர அசக்தர்களாயினும் "பொய்யே கைம்மை
சொல்லி" என்று ஆழ்வார் அருளிச் செய்த வழியில் கபடமாக
அநுகரிக்கவாகிலும் ஆசைப்படுவோமானால் "மெய்யே பெற்றொ
ழிந்தேன்" என்னும்படியே உண்மையான பலனைப் பெற்றே
தீருவோம்.

# அருளிச்செயல் திருத்தங்கள்.

திவ்யப் பிரபந்தத் தனியன்களில் நேர்ந்துள்ள பிறழ்வுகளைப்
பற்றி இப்போது விஜ்ஞாபிக்க விரும்புகின்றேன்.

முதல் திருவந்தாதியின் தனியனாகிய "கைதைசேர் பூம்பொ
ழில் சூழ்" என்னும் செய்யுளில் "அருந்தமிழ் நூற்றந்தாதி"
என்று எங்கும் வழங்கி வருகின்ற பாடத்தைப் பற்றி விஜ்ஞாபிக்
கிறேன். இது வெண்பா எனப்படும். வெண்பாவுக்கும் கட்ட
ளைக் கலித்துறைக்கும் வெண்டளை பிறழாதிருக்கவேண்டிய ஒரு
நிர்ப்பந்தமுண்டு. ஆழ்வார்களின் திருவாக்கு வேத வாக்காகை
யாலே இலக்கண நடையை மீறியும் இருக்கலாமானாலும் அப்படி
யிருக்கவில்லை. வெண்டளை நியதியையுடைய திருவந்தாதிகளும்
திருவிருத்தமும் திருமடல்களும் இலக்கண நியமத்தைக் கடவா
மலே தான் அமைந்திருக்கின்றன. பௌருஷேயங்களான இரா
மானுச நூற்றந்தாதியும் உபதேசரத்தின மாலையும் திருவாய்மொழி
நூற்றந்தாதியும் போலவே அபௌருஷேயங்களான கீழ்ச்சொன்ன
திவ்யப் பிரபந்தங்களும் வெண்டளை விதி வழுவாமே விளங்குகின்
றனவென்பது தமிழறிஞர்களுக்கு நன்றாகத் தெரியும்.

திருவிருத்தத்தில் "தீவினைக் கரு நஞ்சை" என்னும் பாசு
ரத்தின் ஸ்வாபதேசவுரையில் வாதிகேஸரி அழகிய மணவாளச்
சீயர், பாடத்தைப் பற்றிச் சிறிது அங்கு ஆராய்ந்து வருகையில்
இலக்கணத்தை யொட்டியே ஆழ்வார் பாசுரம் அமைந்திருக்கின்ற

தென்கிற விஷயத்தையும் அர்த்தாத் காட்டியிருக்கின்றார். மஹர்ஷிகளுக்கும் மேம்பட்டவர்களான ஆழ்வார்களின் பாசுரங்களே சந்தச்சாஸ்த்ர விதிக்கு இணங்கியிருக்கும்போது ஆசாரியர்களால் அருளிச் செய்யப்பட்ட தனியன் முதலானவற்றில் சந்தோபங்கம் நேர்ந்திருக்கக் காரணமில்லையென்பது கைமுதிக ந்யாய ஸித்தம். சந்தோபங்கம் காணப்பட்டதேயானால் அது பிற்பட்ட காலத்தில் நேர்ந்த பிறழ்வாகவே கொள்ளக் கடவதாகும். இத்தகைய பிறழ்வு நாலாயிரத் தனியன்களில் புகுந்தவிடங்களை ஈண்டு நிரூபிக்கின்றேன்.

மேலே உதாஹரித்த முதல் திருவந்தாதித் தனியனில் "அருந் தமிழ் நூற்றந்தாதி" என்று வழங்கிவருகின்ற பாடத்தின் படியே கொண்டால் வெண்டளை பிறழ்கின்றது. வெண்டளையென்றாலென்ன? அது பிறழ்வதாவது என்ன? என்று சிலர் கேட்கப் புகுந்தால் அது இங்கு எளிதாகத் தெரிவிக்கக்கூடியதன்று. "காய்முன் நேரும் மாமுன் நிரையும் விளமுன் நேரும் வருவது வெண்டளை" என்பதை மாத்திரம் இங்கு நாம் தெரிவிக்கமுடியும். அந்தத் தனியனில் மூன்றாமடியில் [அடியவர்கள் – வாழ – அருந் தமிழ் நூற் – றந்தாதி] என்றுதான் சீர் பிரிக்கவேண்டும். இதில் கடைச் சீரானது காய்ச் சீராகையாலே அடுத்தபடி நேரசை வர வேண்டும். மேலே படி என்று நிரையசையே வந்திருத்தலால் தளை பிறழ்ந்தாயிற்று. ஆசிரியர் அருளிச் செய்திருந்த பாடம் எதுவென்றால் "அருந் தமிழந்தாதி" என்பதுவேயாம். இப்போது, தாதி என்பது கடைச் சீராதலால் பொருந்தக் குறையில்லை. மாமுன் நிரையாயிற்று.

இந்தப் பிறழ்வானது பிள்ளைலோகஞ் சீயர் காலத்திலேயே ஏற்பட்டிருந்தது என்றும் ஊஹிக்கின்றேன். தனியன்களுக்கெல்லாம் வியாக்கியானமருளிச் செய்தவர் அச்சீயர். அவர் ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதரே அவர் இவ்விடத்திற்கு உரை செய்கையில் "ஆயிரம ஐந்நூறுயிருக்கையன்றிக்கே நூறுயிருக்கை" என்று அருளிச் செய்திருக்கையாலே "அருந்தமிழ் நூற்றந்தாதி" என்கிற பாடமே அவரும் கொண்டிருந்தாரென்று நினைக்க இடமுள்ளது. அவர் கொண்ட பாடமேதான் நமக்கும் தஞ்சம் என்று கூறுவார் பலருளர். நாமும் அப்படியே தான் பாடம் ஆதரித்து வருகிறோம். எல்லீரும் அப்படியே ஆதரித்து வருக. ஆனாலும் விஷய தத்துவத்தை விளக்கினோமித்தனை. விபரீதார்த்த ப்ரதிபத்திக்கு ஹேதுவான பாடப் பிறழ்வுகளை மாத்திரம் அவசியம் மாற்றிக்கொள்ளவேணும் — என்பதொன்றே அடியேனுடைய விருப்பம்.



(இரண்டாவது.) பெரிய திருவந்தாதித் தனியனில் "வந்தித்து வாயார வாழ்த்தி" என்றவிடத்தும் வெண்டளை பிறழ்ந்துளது. வாழ்த்தியென்பது மாச் சீராதலால் மாமுன் நிரை வர வேண்டும். நேர் தான் வந்திருக்கின்றது. இது பிறழ்வே. 'வாழ்த்தியே' என்பது பொருந்தும் பாடம்.

(மூன்றாவது) திருமாலைத் தனியனில் "தொண்டரடிப் பொடி யெம்பெருமானை" என்று வழங்கி வருகிறோம். மூன்றாமடியில் [திருமாலை – பாடுஞ்சீர்த் – தொண்டரடிப் – பொடியெம்] என்று சீர் பிரிக்கவேண்டும். இதில் மூன்றாவது சீர் காய்ச் சீராதலால் காய் முன் நேர் வரவேண்டும்; நிரை வந்திருப்பது தவறாகும். "தொண்டர் பொடி யெம்பெருமானை யெப்பொழுதும பேசு" என்பதே வெண்டளை பிறழாத பாடம். தொண்டரடிப்பொடியென்று ஆழ்வார் திருநாமமாதலால் அதுவே தாரையாகப் பாடம் பிறழ்ந்து வந்திட்டது என்பது உண்மை.

(நான்காவது.) இயல்சாத்தில் "நன்றுந் திருவுடையோம்" என்கிற வெண்பாவில் "பிடித்தார் பிடித்தாரைப் பற்றி" என்றே யாவரும் ஓதி வருவது. இதில் கடைச் சீரில் இரண்டு வகையான குற்றம் தமிழறிஞர்கள் அறிந்ததாகும். மோனையின்பம் குன்றினது ஒரு குற்றம். இதுவொரு குற்றமா என்று நினைத்துவிடலாம். இரண்டாவது குற்றம் கேண்மின். வெண்பாக்களில் கடைச் சீரானது ஓரசைச் சீராகவோ அன்றி ஈரசைச் சீராகவோ வரலாம். ஓரசைச் சீராயிருந்தால் எப்படியுமிருக்கலாம். ஈரசைச்சீராயிருந்தால் ஈற்றில் உகரமொன்றே இருக்கத்தகும். வேறு எந்த எழுத்தும் இருக்கலாகாதென்பது நியமம். இந்த நியமத்தை அருளிச் செயல்களில் ஒரு வெண்பாவும் கடந்ததில்லை. கதவு, குன்று, வாய்ந்து, நின்று, என்று, பண்டு, பரிசு—என்றிப்படிப் பட்ட உகர வீற்றதான ஈரசைச் சீர் வந்ததுண்டே யல்லது

வேறு வகை கிடையாது. இங்கே (பிடித்தார் பிடித்தாரைப்) பற்றி என்று இகர விற்றதான ஈரசைச் சீர் காண்பது பிறழ்வாக வேயிருக்கவேண்டும்.

சில மாதங்களுக்கு முன் ஒரு நாள் திருவல்லிக்கேணிக்குச் சென்றிருந்தபோது அங்கே இயல்சாத்து ஸேவிக்கையில் "பிடித்தார் பிடித்தாரைப் பற்றி" என்றே ஸேவித்தார்கள். அடியேனுக்குப் பரமாப்தரான ஸ்ரீ. உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியும் அங்கே ஸேவை ஸாதித்தார். "தேவரீருடைய பாடமும் இப்படித் தானே" என்றேன். இப்படித்தான் என்று சொல்லிவிட்டு, "ஆனாலும் நீ கேட்டபடியாலே ஆலோசிக்கிறேன்" என்று ஸாதித்துவிட்டு, சற்றுப்போது ஆலோசித்து "பிடித்தார் பிடித்தாரைப் பெற்று" என்றிருக்கலாமோ? என்று ஸாதித்தார். 'அடியேனைக் கேட்கவேணுமோ? தேவரீரே நிஷ்கர்ஷிக்கலாகாதா?' என்றேன். பிறகு ரஸமயமான சில வார்த்தைகள் நடந்தன.

—ப்ர. அண்ணங்கராசாரியன்.

---

# அடியேனுடைய யாத்திரை.

(முன் தொடர்ச்சி)

## ஹரித்வாரம்.

"முக்தி தரும் நகரேழ்" என்று சொல்லப்படுகிற ஸப்த புண்ய புரிகளைத் தெரிவிக்கின்ற "அயோத்யா மதுரா மாயா" என்கிற ச்லோகத்தில் 'மாயா' என்றது ஹரித்வார க்ஷேத்ரத்தையே என்பர்கள். ஸ்ரீபதரிகாச்ரமத்திற்கு இந்த க்ஷேத்ரமே முகத்வாரமாகும். இங்கிருந்து பதினைந்து மைல் தூரத்தில் ஹ்ருஷீகேச க்ஷேத்ரமுள்ளது. கங்கா தீரத்தில் ஏகாந்தமாக வஸிக்க வேணுமென்னும் விருப்பமுடையவர்கள் பலர் அந்தக்ஷேத்திரத்தில் பாங்காக உரைகின்றனர். அங்கு ஸ்தல வஸதிகளும் அழகாகவுண்டு.



ஹரித்வாரத்திலிருந்து ரயில் வண்டிகளும் மோடர் பஸ்ஸும் இவ்விடத்திற்கு உண்டு. இதற்கு மேலும் 40–50 மைல் வரையில் மோடர் பஸ்கள் செல்லுகின்றன.

ஹ்ருஷீகேசத்திற்கு நாலு மைல் தூரத்தில் 'லக்ஷ்மணஜூலா' என்கிற தலம் உள்ளது. இளைய பெருமாள் லவணாஸுரனைக் கொன்றதற்குப் ப்ராயச்சித்தமாகத் தவம் புரிய நியமனம் பெற்று இந்த க்ஷேத்ரத்தில் தவம் புரிந்து புனிதரானார் என்று இதிஹாஸம் கூறுகின்றார்கள். ஆனதுபற்றியே இத்தலத்திற்கு லக்ஷ்மணனுடைய திருநாமம் முற்பட்டதாம். 'ஜூலா' என்றால் ஊஞ்சல் என்று பொருள். இத்தலத்தில் பெருகுகின்ற கங்கையின் மீது அமைக்கப்பட்டிருக்கின்ற ஸேதுவானது ஊஞ்சல் போலவே ஆடுகின்றது. இந்த ஸந்நிவேசம் மிகவும் அதிசயிக்கத்தக்கதாயிருக்கின்றது. இத்தலத்தில் மந்திரங்களும் தருமசாலைகளும் வெகு அழகாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

[அடியேனுடைய யாத்திரை இப்போது இவ்வளவில் நின்றது. ஸ்ரீ பதரிகாச்ரமம் சென்று ஸேவித்துமீளவேணுமென்கிற குதூஹலம் பெரிதுமிருந்தது. ஆனாலும் இப்போது இந்த ப்ராந்தத்தில் அதிகமான மழை ஓயாது பெய்யத் தொடங்கிவிட்டபடியால் தற்காலம் இவ்வளவு யாத்திரையே ப்ராப்தமென்று இங்கிருந்தே வதரி வணங்கும் பாசுரங்களையும் திருப்பிரிதிப் பாசுரங்களையும் கண்டமென்னுங் கடிநகர்ப் பாசுரங்களையும் ஸேவித்து "தொழுமத்திசையுற்று நோக்கியே" என்கிற கணக்கிலே திக்கு நோக்கித் தெண்டன் ஸமர்ப்பித்துத் திரும்ப நேர்ந்தது.]

## நைமிசாரணியம்.

ஹரித்வாரத்தில் ரயில் ஏறி நேராக அயோத்யை வரும் வழியில் பாலாமு என்கிற ஜங்ஷனில் பிரிந்து சென்று நிம்ஸார் என்கிற ஸ்டேஷனில் இறங்கவேண்டும். நைமிசாரணியமென்பதே 'நிம்ஸார்' என்று திரிந்திருக்கின்றது. எம்பெருமான் புஷ்கர க்ஷேத்திரத்தில் தீர்த்த ரூபியாகவே அவதரித்ததுபோல இங்கே ஆரண்யரூபியாகவே அவதரித்ததாகப் புராண வரலாறு. பண்டைக் காலத்தில் இவ்விடத்தில் தான் மஹர்ஷிகள் பலரும் கூடி உசாவிப் புராணங்களை வெளியிட்டார்களென்று இதிஹாஸம்.

இவ்விடத்தில் சில வருஷங்களாக, ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ வானமாமலை ஸ்வாமியின் திருவருளால் ஒரு ஸந்நிதி ஏற்பட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு வெகு ஸௌகரியமளிக்கின்றது. இங்கிருந்து மறுபடியும் பாலாமு ஜங்ஷன் சேர்ந்து நாலு மணி காலத்தில் அயோத்யை அடைவது. ஹரித்வாரத்தில் இரவு 9 மணிக்குப் புறப்பட்டால் மறு நாள் உதயம் எட்டு மணிக்கு நைமிசாரணியம். இங்குச் செல்லாமல் நேரே அயோத்யை செல்லுவதானால் பகல் 12 மணிக்குள்ளாகச் சென்று சேரலாம.

## அயோத்யை.

பலர் அயோத்யை ஸ்டேஷனிருப்பது அறியாமல் 'பைஜாபாத்' என்கிற ஸ்டேஷனில் இறங்கி 3, 4 மைல் தூரம் வண்டிவழியாக வந்து அயோத்யை சேருகிறார்கள். அயோத்யை என்றே ஸ்டேஷனிருப்பதால் அதிலிறங்கிச் செல்லுவதே பாங்கு.

இத்தலத்தில் ஸ்ரீ. உ. வே. யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி நாற்பதைம்பது வருஷங்களுக்கு முன் சக்ரவர்த்தி திருமகன் ஸந்நிதி ப்ரதிஷ்டை செய்தருளியிருப்பதால் இந்த ஸந்நிதியே நம் போன்றவர்களுக்குச் சிறந்த புகலிடம். இது ஸரயூ நதிக்கு ஸமீபமாகவேயுள்ளது. "ஜோலா காட் — ஸ்ரீ தர்ப்பசயன மந்திரம்" என்று இந்த ஸந்நிதியை வழங்குவர்கள். ஆனாலும் "அம்மாஜீ மந்திரம்" என்றே ஸர்வஜந ஸாதாரணமான வ்யவஹாரம்.

ஷை யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமியின் தேவியார் [தொண்ணூற்றைந்து பிராயம் வாய்ந்தவர்] இந்த ஸந்நிதியின் பரிபாலனங்களை வெகு அழகாக நடத்தி வருவதால் 'அம்மாஜீ மந்திரம்' என்று ப்ரஸித்தி ஆயிற்று. "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற ஆழ்வார் மங்களாசாஸனம் இந்த அம்மாவிடத்தில் வெகு அழகாகப் பலித்திருக்கின்றமை மிகவும் உவக்கத் தக்கது. கூரத்தாழ்வான் தேவியாரான ஆண்டாள் என்றே கருதத்தக்க வ்யக்தி விசேஷம். இந்த அம்மாவிடத்தில் பகவத் விஷய ரஹஸ்யாதிகள் காலக்ஷேபம் செய்து உத்தீர்ணர்களான மஹான்கள் பலருண்டு. இப்போது தொண்ணூற்



றைந்து பிராயமாயினும் கரண பாடவத்துடன் எழுந்தருளியிருந்து ஸந்நிதி கைங்கரியங்களை நிர்வஹித்து வருவது இராமபிரானது திருவருட் பெருக்கென்றே அறுதியிடத் தக்கது.

இவ்வயோத்திமாநகரில், தசரத சக்ரவர்த்தி கொலுவிருந்த மண்டபம், ஸ்ரீராம ஸீதைகள் வஸித்த இடங்கள், கைகேயியின் கோபக்ருஹம் முதலானவை காட்டப்படுகின்றன. பதினெட்டிருபது மைல் தூரத்தில் நந்திக்ராமமும் உள்ளது. இவ்வயோத்தியில் இப்போது அநேக ஸம்ஸ்க்ருத பாடசாலைகள் ஏற்பட்டு சாஸ்த்ரப்ரவசநம் விசேஷித்து நடைபெறுகின்றது. தனிகர்களான உத்தராதி ஸ்ரீவைஷ்ணவ மஹந்துக்களின் மந்திரங்களும் பல விளங்குகின்றன.

## அலஹாபாத். (ப்ரயாகை)

அயோத்தியையிலிருந்து சித்ரகூடம். போகலாமானாலும் தற்காலம் அடியேனுக்கு அது ப்ராப்தமாகவில்லை. அயோத்யையிலிருந்து நாலைந்து மணி காலத்தில் அலஹாபாத் சேருகிறது. ப்ரயாக க்ஷேத்திரத்திற்கு இதுவே பெரிய ஸ்டேஷன். (சின்ன லயனில் ப்ரயாக் என்கிற ஸ்டேஷனுமுள்ளது.) 'தாரா கஞ்ஜ்' என்னுமிடத்தில் தான் தங்கவேண்டும். அவ்விடத்திலேயே த்ரிவேணீ ஸங்கம ஸ்நாந கெட்டம் அணித்தாக வுள்ளது. கங்கை, யமுனை, ஸரஸ்வதீ யென்கிற மூன்று புண்ணிய நதிகள் த்ரிவேணீ என்னப் படுகின்றன. இங்கு கங்கையும் யமுனையும் ஸங்கமமாவதே கட்கூடாகத் தெரிகின்றது. ஸரஸ்வதி அந்தர்வாஹினியாகவுள்ளது. "गङ्गायमुनयोर्मध्ये यत्र गुप्ता सरस्वती— கங்காயமுநயோர் மத்யே யத்ர குப்தா ஸரஸ்வதீ." என்று புராண ச்லோகமும் கூறுவர். ஸங்கமஸ்தானத்திற்குப் படகிற் சென்று நீராடவேண்டும். சிறிது தூரத்தில் பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமமும் காட்டப்படுகிறது. தாராகஞ்ஜில் த்ரிதண்டிமடம் என்கிற இடம் நம் போன்றவர்களுக்கு ஸௌகரியமான புகலிடம். இதர மடங்களும் தருமசாலைகளும் உள்ளன.

## காசீ க்ஷேத்ரம்.

ப்ரயாகையிலிருந்து மூன்று மணி காலத்தில் இவ்விடம் சேருகிறது. இங்கு தருமசாலைகள் மந்திரங்கள் பல பல இருந்தா

னும் கங்கைக் கரையில் இடம் பார்த்து வஸிப்பதே விரும்பத் தக்கது. "நாகபூர் போஸலாமந்திர்" என்கிற இடம் மிகவும் விசாலமாகவும் பரம ஸௌகரியமாகவுமுள்ளது. இதைக் காட்டி னும் ஸௌகரியமான இடம் வேறு இராதென்றும் சொல்லலாம். இதனுள்ளேயே கங்கையும் பெருகுகின்றது. இந்த மந்திரத்தில் வஸிக்க நபர் 1க்கு, நாள் 1க்கு ஒரு அணா வாடகை செலுத்த வேண்டும். தேவேந்திர பவனத்தில் வாழ்வதொக்கும்.

காசியைப் பற்றி அடியேன் எழுத வேண்டியது என்ன இருக்கிறது? இப்போது பூமண்டலத்திற்குள் மிகச் சிறந்த வித்யா பீடம் இதுவே யென்னலாம். இங்கு ஏறக்குறைய நாலாயிரம் வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்கள் பயில்கின்றனர். ஒவ்வொரு சாஸ்திரத்தையும் கரை கண்டவர்கள் என்று விசேஷித்துப் பரிகணநம் செய்யக்கூடிய மஹா பண்டிதர்கள் இருநூறு பேர் விளங்குகின்றார்கள். வித்யாலயங்களோ எண்ண முடியாதவை. ஸகல கலைகளுக்கும் இவ்விடத்தில் சிறந்த பிரசாரம் காண்பது நெஞ்சைப் பரவசமாக்குகின்றது. இவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸங்கியை மிகமிகக் குறைந்துள்ளது. பொதுவாக, மிகச் சிறந்த மாநகரமென்று கொண்டாடுதற்கு இதுவே ஏற்றதென்னத் தடையில்லை. ஆசிரியர் "காசி முதலாகிய நன்னகரி" என்று எடுப்பதற்கு மிகவும் ஔசித்யமுண்டு.

## கயா க்ஷேத்ரம்.

காசியிலிருந்து ஐந்தாறு மணி காலத்தில் இவ்விடம் சேருவது. இந்த க்ஷேத்ரத்தின் பெருமை விச்வப்ரஸித்தம். இங்குப் புரோஹிதர்களின் ஆதரவு யாத்திரிகளுக்குப் பெரிதும் கிடைக்கும். ஆனாலும் சில வருஷ காலமாக இங்குப் பல்குநீ நதிக் கரையில் ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு ஸ்ரீமதநந்தாசார்ய ஸ்வாமி திருவருளால் அமைந்திருக்கின்ற ராமாநுஜகூடம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பாங்கான புகலிடம். ஸமீப காலத்தில் ஜீர்ணோத்தாரணம் செய்து வெகு அழகாக அமைக்கப்பட்டிருக்கின்றது.

## கல்கத்தா நகரம்.

கயையிலிருந்து அடுத்தபடியாக ஸ்ரீஜகந்நாத க்ஷேத்ரம் செல்லவேண்டியதாகிறது. இடையில் இம்மகா நகரமும் அனுபவிக்கத் தக்கது. இங்கும் ரயில் ஸ்டேஷன் வாசலில் கங்கை ஸதத ப்ரவாஹமாகப் பெருகுகின்றது. அதன் ஸமீபத்தில் தருமசாலைகளும் மந்திரங்களும் வஸதிக்கு ஸௌகரியமாக வுள்ளன. பலதேவஜீ மந்திரம், அல்லது மாஹேச்வரீ பவனத்தில் தங்கலாம்.



## ஸ்ரீ ஜகந்நாதம்.

கல்கத்தா நகரிலிருந்து ஓரிரவு பிரயாணஞ் செய்து இத்தலத்திற்கு வரவேண்டும். புரீ என்றே இத்தலம் பெரும்பாலும் வழங்கப் பெறும். இவ்விடத்து மாகாத்மியம் வருணிக்க முடியாதது. ஸந்நிதியின் அமைப்பு முதலானவை ஒவ்வொன்றும் நெஞ்சைக் கவர்வன. இங்குப் புண்ய தீர்த்தங்கள் பல பலவுள்ளன. ஸந்நிதிக்கு அரை மைல் தூரத்தில் சந்தனபுஷ்கரிணி யென்கிற மிகப் பெரிய தடாகம் ஸர்வோத்தமமானது. ஸமுத்ரமும் இங்கு ஸமீபஸ்தம். இத்தலத்தில் ஸ்ரீவைஷ்ணவ மடங்கள் அநாதி காலமாக அமைந்தவை நூற்றுக்கணக்காக இருக்கின்றன. ராஜகோபால மடம், உத்தர பார்சுவ மடம் போன்ற சில பெரிய மடங்கள் மிகவும் ஸௌகரியமான புகலிடங்கள். ஆதரிப்பும் அபிநந்தநீயமானது.

## ஸ்ரீ கூர்மம்.

ஸ்ரீ ஜகந்நாதத்திலிருந்து சென்னைக்கு வரும் வழியில் 'சீகாகோளம் ரோட்' என்கிற ஸ்டேஷனில் இறங்கி இத்தலத்திற்கு வரவேண்டும். ஸ்டேஷனிலிருந்து மோடர் பஸ்ஸில் 18 மைல் தூர வழி கடந்து இத்தலமடைய வேண்டும். ஸந்நிதியின் வாய்ப்பும் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பக்தி ச்ரத்தைகளும் வாசாமகோசரம்.

## ஸிம்ஹாசலம்.

ஸ்ரீ கூர்மத்திலிருந்து இத்தலத்திற்கு வருவது. இது விசாகபட்டணத்திற்கு மிக ஸமீபத்திலுள்ளது. வெகு அற்புதமான க்ஷேத்திரம். சரியாய் ஆயிரம் படிகள் ஏறிச்செல்லவேண்டும். இத்தலத்து அழகியானுடைய திருமேனி எப்போதும் சந்தனக் காப்பு அணியப்பெற்றிருக்கும். வருஷந்தோறும் ஒரு நாளில் [அதாவது, அக்ஷயத்ருதீயையில்] திருமேனி ஸேவை ஸாதிப்பது வழக்கமென்கிறார்கள். மிகப் புனிதமாய இத்தலத்தில் பல ஸ்ரீ

வைஷ்ணவர்கள் அநுதினமும் ஸந்நிதியில் ஸ்ரீபாஷ்யம் பகவத் விஷயம் ஸ்ரீராமாயணம் ஸ்ரீவசந பூஷணம் முதலான திவ்யக்ரந்தங்களை நியமேந பாராயணம் செய்து வரும்படி வ்யவஸ்தை ஏற்பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. இங்ஙனம் ஸகல திவ்ய தேசங்களிலும் ஏற்பட்டால் இது ஸந்நிதிகளுக்கு விலக்ஷணமான பெருமையாகும்.

இத்தலத்தோடு யாத்திரை முடிவு பெற்றது. 22—8—40 வியாழக்கிழமை யன்று ஸ்வஸ்தானம் வந்து சேரலாயிற்று.

இங்ஙனம்
ஸ்ரீவைஷ்ணவதாஸன்,
ப்ர. அண்ணங்கராசாரியன்,
ஸ்ரீகாஞ்சீ.

## பெரியார் பரமபதப் பிராப்தி.

சுயம் வியக்த க்ஷேத்திரங்களில் ஒன்றாய்ச் சிறந்து விளங்கும் கோட்டிடை நிலங்கொண்ட கோலவராகப் பெருமாள் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமுஷ்ணம் திவ்ய தேசத்தில் இத்தலை முறையில் மிகப் பிரசித்தராய் இருந்து ஸ்ரீபூவராகப் பெருமாள் கோயில் கைங்கரியங்களில் தென்னாசார்ய ஸம்ப்ரதாயம் வழுவாது பெருந்தொண்டு செய்து வந்தது மன்றி அடியார்கள் விஷயங்களிலும் "...............வஞ்சமுக்குறும்பாம் குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான்" போன்ற பெரியார் ஸ்ரீ. உ. வே. திருமலை நம்பாக்கம் சடகோப கிருஷ்ணமாசாரிய ஸ்வாமி கடந்த ஆடி-மீ 19-உ தமது 58-ம் திருநக்ஷத்திரத்தில் திருமேனி பாங்கின்றி இருந்து திருநாடலங்கரித்தார். இனி யொரு பெரியார் இதே ஸ்தானத்தில் அமர்ந்து தென்னாசார்ய தர்சனத்தைச் சீர்பெறக் கொண்டு வருவது அரிது அரிது என்று அன்பர் குழாம் வருந்தி அலமர வேண்டிய நிலையில் அப்பெரியாரின் குடும்பத்தினர்க்கு நமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

டாக்டர் கோதண்டபாணி ஐயங்கார்.

## ஸ்ரீ ராமாயணத்தில் — — — — ஸந்தேஹ பரிஹாரம்.

வால்மீகி ராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் ஐம்பத்து நான்காவது ஸர்க்கத்தில் அங்கதனுடைய ப்ராயோபவேச முயற்சியை மறுத்துக் கூறுகின்ற மாருதியானவர் "तस्यापत्यं च नास्त्यन्यत्तस्मादङ्गद! गम्यताम् – தஸ்யாபத்யஞ்ச நாஸ்த்யந்யத் தஸ்மாதங்கத ! கம்யதாம்" என்று சொல்லியிருக்கிறார். இதன் கருத்து யாதெனில், அங்கதா! ஸுக்ரீவனுடைய கட்டளையின்படி ஸீதா பிராட்டியைக் கண்டு பிடித்து வெற்றியுடன் திரும்பிப் போகமாட்டாத நம்மை ஸுக்ரீவன் கொலை செய்துவிடுவான் என்று நீ ஏன் அஞ்சுகின்றாய்? ஒருகாலும் ஸுக்ரீவன் அப்படி கொடுந்தொழில் புரியமாட்டான். அவனுக்கு நீ தவிர வேறு புத்திரனுமில்லை; உன்னையே அவன் சொந்த மகனாகப் பாவித்து அன்பு பாராட்டியிருப்பதனால் அவனைப்பற்றி நீ அஞ்சவேண்டா; உனக்கே அவன் பட்டம் கட்டுவான்; இங்கே தற்கொலை செய்து கொள்ள வேண்டா; ஊருக்குத் திரும்பிப் போகலாம்—என்பதாம். இதனால் ஸுக்ரீவனுக்கு வேறு மகனில்லை யென்பது நிஸ்ஸந்தேஹமாகக் காட்டப்பட்டது.

இங்ஙனம் சொன்ன மாருதியை நோக்கி மறுமொழி கூறுகின்ற அங்கதன் அடுத்த ஸர்க்கத்தில் (55–8) "राज्ये पुत्रः प्रतिष्ठाप्यः सगुणो निर्गुणोऽपि वा। कथं शत्रुकुलीनं मां सुग्रीवो जीवयिष्यति?॥ —ராஜ்யே புத்ர: ப்ரதிஷ்டாப்ய: ஸகுணோ நிர்குணோபி வா, கதம் சத்ருகுலீநம் மாம் ஸுக்ரீவோ ஜீவயிஷ்யதி" என்று கூறியிருக்கிறான். ஸுக்ரீவன் தன் மகனுக்கு ராஜ்யத்தில் அரசுரிமை கொடுப்பதை விட்டு சத்ருவின் புத்லவனை எனக்கு ஏன் கொடுப்பான்? என்பது இந்த ச்லோகத்தின் கருத்தாதலால் இவை பரஸ்பர விருத்தமாக இருக்கின்றனவே; ஸுக்ரீவனுக்குப் புத்திரன் கிடையாதென்று மாருதி சொல்லி யிருக்கிறார்; புத்திரன் உண்டென்று அங்கதன் வார்த்தையினால் விளங்குகின்றது; இந்த விரோதத்தைப் பரிஹரிக்க வேணும்—என்று ஒரு நண்பர் தெரிவிக்கிறார்.

(பரிஹாரம்) இங்கு விரோதமே கிடையாது. அங்கதன் வார்த்தையினால் ஸுக்ரீவனுக்கு மகனிருப்பதாக விளங்குகின்றதென்று கொள்ள இடமில்லை. "வயிற்றில் பிறந்த பிள்ளையாக இருந்தால், அவன் குணவானோ நிர்க்குணனோ எப்படி யிருந்தாலும் அவனுக்கு ராஜ்யம் அளிக்கலாகும்; நானோ ஸுக்ரீவனுக்கு ஔரஸபுத்திரனல்லேன்; விரோதியின் புதல்வனாயு மிருக்கிறேன். இப்போது குணமற்றவனாயுமாய் விடுகிறேன். இப்படிப்பட்ட என்னை அவன் ஏதுக்கு ஆதரிப்பான்" என்பதே அங்கதனுடைய வார்த்தையின் கருத்தாதலால் விரோதத்திற்கு உதயமேயில்லையென்று கண்டு கொள்வது. —ப்ர. அ.

—oo※oo—

## பகவத் விஷயத்தில் வினா விடை.

திருவாய்மொழியில் (1–5–5) *மானேய் நோக்கி மடவாளை* என்னும் பாசுரத்தில் "கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!" என்ற விடத்திற்கு வியாக்கியானமருளிச் செய்யா நின்ற நம்பிள்ளை, க்ருஷ்ணாவதாரத்தில் "நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத், தேறி யவளும் திருவுடம்பிற் பூச, ஊறிய கூனினை உள்ளே யொடுங்க, அன்றேற வுருவினாய்!" என்கிறபடியே நடந்ததான கூனி கூன் நிமிர்த்த வரலாற்றை முந்துற முன்னம் அர்த்தமாக அருளிச் செய்து, பிறகு பக்ஷாந்தரமாக ராமாவதார கதை யொன்றை அர்த்தமாக அருளிச் செய்கிறார். "வநவாஸ ஹேது பூதையான குப்ஜையைச் சொல்லிற்றாய், பால்யத்திலே பெருமாள் சுண்டுவிற் கொண்டு திரியா நிற்க லீலாரஸமநுபவித்தாரென்றுண்டு; அத்தைப் பற்றச் சொல்லிற்றாகவுமாம்" என்பது ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்தி. ராமாவதாரத்தில் இங்ஙனே யொரு சரிதை நடந்ததாக எங்கே கூறப்பட்டுளது? என்று ஒரு பெரியார் வினவியுள்ளார்.

(விடை) வடமொழிப் புராணங்களில் எந்த புராணத்தில் எந்த இடத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றதென்பது நம்முடைய ஆராய்ச்சிக்குப் புலனாகவில்லை. வால்மீகி ராமாயணத்தில் இஃது இல்லையென்பது அனைவருமறிந்ததாகும். கம்ப ராமாயணத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றது. வாலி வதமான பின்பு இராமபிரான் சுக்ரீவனுக்கு முடி சூட்டி அவனுக்குச் சில ஹிதோபதேசங்கள் செய்யுமிடையில் [கிட்கிந்தா காண்டத்து அரசியற் படலத்தில்]

"சிறியரென்றிகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்றிந்
நெறியிகந்து யானோர் தீமையிழைத்த லாலுணர்ச்சி நீண்டு
குறியதா மேனியாய கூனியாற் குவவுத்தோளாய்!
வெறியன வெய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்.'

என்பது பெருமாளுடைய பாசுரமாக அமைக்கப்பட்டிருக்கின்றது. இராமன் சிறுவனாயிருந்த காலத்தில் ஒரு நாள் கையில் சிறு வில்லும் மண்ணுண்டையுங் கொண்டு விளையாடி வருகையில் விற்கொண்டு எய்த உண்டை மந்தரை யென்னுங் கூனியின் முதுகின் புறத்தே தெறிக்க, அவள் தனது கூனுடைமையை இராமன் இங்ஙனம் பரிஹஸித்தனனென்று தவறாகக் கருதி மனம் வருந்தி அவன்மேற் சினங்கொண்டு, ராஜபுத்திரனாகையாலே அப்பொழுது ஒன்றும் செய்யமாட்டாமற் சென்று தனக்கு வாய்க்குந் தருணம் நோக்கிக் கறுக் கொண்டிருந்து, பின்பு தசரதன் இராமபிரானுக்கு முடிசூட்ட நிச்சயித்ததை உணர்ந்தவளவில் கோபதாபம் மிக்கவளாகி, அதற்கு எப்படியாவது தான் தடை செய்ய வேண்டுமென்று நிச்சயித்து, கைகேயிக்குக் கலகஞ் செய்து அவள் மனத்தை மாற்றி அவளைக் கொண்டு இராம பட்டாபிஷேகத்தைத் தவிர்த்து அப்பெருமானை வனம் புகுவித்தனள்—என்கிற இதிஹாசம் மேற்குறித்த கம்பர் செய்யுளிற் பொதிந்துள்ளது. அவர் ஒரு வடமொழிப் புராணத்தின் ஆதாரங் கொண்டே கூறியிருத்தல் வேண்டும். அதனை அறிவாருளரேல் அறிவித்தருள்க.

—ப்ர. அ.



## கோயில் திருமலை பெருமாள் கோயில்.

### (திருப்பதிச் செய்தி.)

"ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம்" என்று ஸுப்ரஸித்தமான இம்மூன்று திவ்ய தேசங்களில் எம்பெருமான்கள் க்ருதஸங்கேதர்கள் போல ஸமீப காலத்தில் செய்து கொண்ட காரியம்

மிகவும் அதிசயிக்கத் தக்கதாயிரா நின்றது. இம்மூன்று திருப்பதிகளிலும் மடாதிபதிகளின் ஸ்தானங்கள் ஸமீப காலத்தில் பூர்த்தி செய்யப்பட்டன வென்பது உலகமறிந்ததே. முதலில் காஞ்சீபுரியில் ஸ்ரீ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி மடத்தை ஒரு வித்வான் அலங்கரித்தார். அதன் பிறகு இரண்டொரு திங்களில் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமிமடத்தை ஒரு வித்வான் அலங்கரித்தார். இவ்விரண்டையுங் கண்ட திருமலையப்பன் தானும் ஒரு வித்வானை வரித்துக் கொண்டான். திருமலை திருப்பதியில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. சிறிய கேள்வி ஜீயர் ஸ்வாமி ஒரு மாதத்திற்கு முன் திருநாடலங்கரித்த விஷயம் ஏற்கனவே லஹரியில் தெரிவிக்கப்பட்டுளது. அந்த ஆஸ்தானத்தில் இப்போது ஸ்ரீவில்லிபுத்தூர். உ. வே. ஙியாய வேதாந்த வித்வான், ஸாது. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி அபிஷிக்தானுர் என்னும் விஷயம் அனைவர்க்கும் பரம ஸந்தோஷகரமானது. இந்த ஸ்வாமியின் ஞான விரக்திகள் நாடு நகாமும் நன்கறிந்தவையே. பத்தெட்டு வருஷ காலமாகத் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்து பகவத் விஷய ரஹஸ்ய ப்ரவசனங்கள் செய்து போந்தார். அதற்கு முன் சில வருஷங்கள் மதுரையில் எழுந்தருளியிருந்து கூடலழகர் ஸந்நிதியில் உபயவேதாந்த ப்ரவசநம் செய்தருளினர். சாஸ்த்ர பரிஷ்க்ருதமான மிக்க ஞானத்துடன் உபய வேதாந்தங்களிலும் நிஷ்க்ருஷ்டமான தெள்ளறிவு படைத்து உபதேச ஸாமர்த்தியமும் நன்கு வாய்ந்த இப்பெரியார் திருமலையப்பனுக்கு அபூர்வமான விருந்து என்பதில் ஐயமில்லை. "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணுடே."

இப்படி மூன்று திவ்ய தேசங்களுக்கும் வித்வன்மணிகளே மடாதிபதிகளாக வாய்த்த அதிசயம் சொலப்புகில் வாயமுதம் பரக்கும். இம்மூன்று மடாதிபதி ஸ்வாமிகளும் ஸ்ரீ பெரும்பூதூர் கலாசாலையில் உத்தீர்ணர்களாயிருந்து வரிசையாக ஆஸ்தானங்களை அலங்கரித்தருளின வாற்றை நோக்குங்கால் "மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்" என்னும்படி திவ்யதேசநிர்வாஹ துரந்தரான எம்பெருமானுர் தாமே இந்தத் திருநாமங்களை அருளாளர்க்கும் அப்பனுக்கும் அரங்கனுக்கும் உபஹாரமாக அளித்தனர் போலு மென்னலாயிருந்தது.



இன்னமும் சிறிது ஆழ்ந்து நோக்குங்கால், சென்ற விஜய தசமி யன்று ஸ்ரீ வானமாமலை ஆஸ்தானத்தில் அப்ரதிம வித்வன்மணி அபிஷிக்தாரகவே, அந்த சாயையைப் பின்பற்றியே மற்றுமுள்ள ஆஸ்தானங்களுக்கும் அத்தகைய வைபவமே அநுவர்த்திக்கலாயிற்றென்று அறுதியிடலாம். —ப்ர.௺அ.

# அருமருந்தான ஸுபாஷிதங்கள்.



ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய ஸாகரத்தில் அரும்பெரு மணிகள் போன்ற சுலோகங்கள் ஸுபாஷிதங்களென வழங்கப் பெற்றுப் பல்லாயிரமுள்ளன. அவை லஹரியில் பொழிப்புரையுடன் வரிசையாக வெளிவரும்.

## (1)

जीवनग्रहणे नम्राः गृहीत्वा पुनरुन्नताः ।
किं कनिष्ठाः किमु ज्येष्ठा घटीयन्त्रस्य दुर्जनाः ॥

ஜீவநக்ரஹணே நம்ரா: க்ருஹீத்வா புநருந்நதா:,
கிம் கநிஷ்டா: கிமு ஜ்யேஷ்டா கடீயந்த்ரஸ்ய துர்ஜநா:

ஏற்றச்சாலுக்கு கடீயந்த்ர மென்று பெயர். துஷ்டர்கள் ஏற்றச் சாலுக்குத் தம்பிகளோ தமையன்களோ என்று ஸந்தேஹிக்கிறுர் கவி. ஏனென்னில்; குணத்தில் ஒற்றுமையைப் பற்ற.

ஜீவந மென்கிற வடசொல் தண்ணீருக்கும் ஜீவிகைக்கும் வாசகம். ஏற்றச் சாலானது தண்ணீரை மொண்டு கொள்வதற்காகத் தாழும்; தாழ்ந்து ஜீவநம் பெற்றவாறே தாழ்ச்சி யொழிந்து தலையேறி நிற்கும். துர்ஜந ஸ்வபாவமும் இங்ஙனே யாகும். தமக்கு ஜீவிகை வேண்டும்போது தாழ்ச்சி காட்டிக் காலைப்பிடித்து நிற்பர்கள். ஜீவிகை பெற்றவாறே மார்பு நெறித்து வணங்கா முடி மன்னராய்ச் செருக்குற்றிருப்பர்கள்—என்றவாறு.

இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தைப் பலகால் ஆவ்ருத்தி செய்யவேணும். ஏனென்னில், தாழ்ந்து நிற்பதும் தலை தூக்கி

நிற்பதும் ஏற்றச் சாலுக்கு மாறி மாறி நடத்தலால். துர்ஜனங்களுக்கும் இதுவே நித்ய யாத்திரையாகும்.

(2)

करिष्यामि करिष्यामि करिष्यामीति वादिभिः ।
मरिष्यामि मरिष्यामि मरिष्यामीति विस्मृतम् ॥

கரிஷ்யாமி கரிஷ்யாமி கரிஷ்யாமீதி வாதிபி:,
மரிஷ்யாமி மரிஷ்யாமி மரிஷ்யாமீதி விஸ்ம்ருதம்.

நல்ல காரியங்களைச் செய்ய நினைப்பவர்கள் "गृहीत इव केशेषु मृत्युना धर्ममाचरेत्—க்ருஹீத இவ கேசேஷு ம்ருத்யுநா தர்மமாசரேத்" என்கிறபடியே தங்களுக்கு மரணம் ஸந்நிஹிதம் என்று நினைத்து அந்த நல்ல காரியங்களைக் காலதாமதமின்றிச் செய்து முடிக்கவேண்டுமே யல்லது 'பார்ப்போம், செய்வோம்' என்றிருக்கலாகாது என்றவாறு.

(3)

प्रथितं पातकिवर्गे कृतघ्न एको हि कृत्स्नमतिशेते ।
तमिमं क्रियमाणघ्नः तमपि दुरात्मा करिष्यमाणघ्नः ॥

ப்ரதிதம் பாதகிவர்க்கம் க்ருதக்ந ஏகோ ஹி க்ருத்ஸ்நமதிசேதே,
தமிமம் க்ரியமாணக்ந: தமபி துராத்மா கரிஷ்யமாணக்ந:"

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு" என்பது திருக்குறள். "க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:" என்பர் வடமொழியாளரும்.

பிறர் செய்த உபகாரங்களை மறப்பவன் பஞ்ச மஹா பாதகிகளினும் சிறந்தவன். பிறர் செய்து கொண்டே யிருக்கிற உபகாரங்களை மறப்பவன் அவனினும் சிறந்தவன். "இவர் நாளைக்கு நமக்கு ஓர் பெரிய உபகாரம் செய்யப் போகிறார்" என்று தெரிந்து கொண்டு முந்தியே அப்பெரியார்க்குத் தீங்கிழைக்குமவன் ஸர்வோத்க்ருஷ்டன். [இது ஸங்கல்பஸூர்யோதயத்திலுள்ளது]

—<>—



# சிரோமணியின் ஸம்ஸ்க்ருதப் புலமை.

[ஸ்ரீரங்கம் வித்வான். R. ரங்கராஜய்யங்கார்.]

ஸ்ரீமாந், ஸ்ரீநிவாஸாசார்ய சிரோமணி யென்பவர் ஒரு பத்ரிகையில் ஸம்ஸ்க்ருத வியாஸமொன்று வெளியிட்டுள்ளார். ஸ்ரீசைலேசாஷ்டகம் எறும்பியப்பா பணித்ததாக இருக்க நியாயமில்லை யென்று ஸ்தாபிக்க ஆசைப்படுகிறார். ஸம்ஸ்க்ருத பாஷையின் அமைப்பு அவ்வளவு நன்றாயில்லை யென்று எழுதுகிறார். உண்மையில் ஸம்ஸ்க்ருத பாஷையின் சுவடறிந்த வித்வான்கள் இதையெழுதினால் ஏற்கும். இந்த சிரோமணியின் ஸம்ஸ்க்ருதப்புலமை எப்படிப்பட்டதென்று உணர அந்த ஸம்ஸ்க்ருத வியாஸமே போதும். ஸ்தாலீபுலாக நியாயமாக ஒன்று காட்டினால் போதுமன்றோ. ஸ்ரீசைலேசாஷ்டகத்தில் சில அநுபபத்திகள் இருப்பதாக எழுதி "एतादृशाः अनुपपत्तयः—ஏதாத்ருசா: அநுபபத்தய:" என்று எழுதுகிறார் சிரோமணி. அநுபபத்தி சப்தம் ஸ்த்ரீலிங்கமென்பதை சிறுகாவியம் வாசிப்பவர்களும் எளிதிலுணர்வர்கள். ஏதாத்ருசா: என்கிறவிது பும்லிங்கமென்பதில் யாருக்கும் விவாதமிராது. விசேஷண விசேஷ்யங்கள் ஸமாநலிங்கமாக இருக்க வேணுமென்கிற இவ்வளவு கூட அறியாமல் சிரோமணி பட்டம் பெற்று எழுதப் புகுந்தது தான் ஆச்சரியம்.

"ஸ்ரீமாந் ஸ்ரீரங்கநாதார்ய:" என்கிற ச்லோகம் எறும்பியப்பா பணித்ததென்றாவது ஸ்ரீசைலேசாஷ்டகத்தைச் சேர்ந்ததென்றாவது ஒருவரும் சொன்னதுமில்லை; நினைத்ததுமில்லை. அந்த ச்லோகம் மற்றுஞ் சில ஸ்தோத்ரங்களின் முகப்பிலும் அச்சிடப் பெற்றுக் காண்கிறது. அது முகப்பில் விளங்கும் ஸ்தோத்ரங்களெல்லாம் கல்பிதங்களென்னில் அநவஸ்தையாம். ஆகவே சிரோமணியின் வியாஸம் விவேகிகளால் அருவருக்கத் தக்கதென்பது திண்ணம். மற்றைப்படி விரிவாகச் சொல்லவேண்டிய விஷயங்கள் தனிப் புத்தகத்தில் காணத்தக்கன.



# கோயில் நம்பெருமாள் கண்ணாடியறை ஜீர்ணோத்தாரணம்.

அழகிய மணவாளன் பெருமைக்கேற்ப இதுகாறும் கண்ணாடியறை ஏற்படாமலிருந்தது பெருங் குறைவேயாகும். இப்பெருங் குறையை நிவர்த்திக்க இப்போது ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி ஆஸ்தானத்தில் அபிஷிக்தரான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. உ. வே. ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி மிக அழகாக கண்ணாடியறையைப் புதுப்பிக்க ஸங்கல்பித்து அதற்கான வேலையும் ஆவணி-மீ 20-உ (4-9-40) புதன்கிழமை யன்று ஆரம்பமாகி நடைபெற்று வருகிறது. இக்கைங்கரியத்தை எளிதில் பூர்த்திசெய்யும் திறமை இந்த ஸ்வாமிக்கு உண்டு என்பது சென்ற மாத லஹரியைக் கண்ணுற்ற நண்பர்களுக்கு நாம் சொல்லாமலே நன்கு விளங்கும். இந்தக் கைங்கரியம் பூர்த்தியாக சுமார் ரூபாய் பதினாயிரம் செலவாகலாம். இச்சிறந்த கைங்கரியத்தைப் பூர்த்தி செய்ய ஆஸ்திக கனதனவான்களும் புண்ய வந்து தங்கள் தங்களாலியன்றவளவு பொருளுதவி செய்ய வேணுமாய்ப் பிரார்த்திக்கப் படுகிறது.

---

# ஸ்ரீமத்வேதாந்த தேசிக க்ரந்தமாலா.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடமாக தேவநாகரி லிபியில் அச்சிட ஆரம்பித்திருக்கிறது. தேசிகன் ஸாதிக்க க்ரந்தங்கள் நூற்றுக்கணக்கில் இருப்பதால் மொத்தமும் அச்சிடுவதற்கு அதிக பணச்செலவும் அதிக காமதமும் ஆகுமாதலால் பிரதி மாசமும் ஸஞ்சிகையாகவே வெளியாகிறது. ஒரு வருஷத்தில் மொத்தக்ரந்தங்களும் அச்சாகி வெளிவருமென்பதில் ஸந்தேஹமில்லை. இப்போது சததூஷணீ, அதிகரண ஸாராவளீ முடிந்திருக்கிறது.

ஸஞ்சிகை ஒன்றுக்கு விலை ரூ. 1—0—0. தபால் செலவு தனி.

வித்வான் T. A. ஸம்பத்குமாராசார்யார்,
29, தென்னண்டை மாடவீதி, சின்ன காஞ்சீபுரம்.



॥ ஶ்ரீரஸ்து ॥

[illegible]

॥ [illegible] ॥

[illegible]

॥ அவதாரிகா ॥

[illegible]

வ்ருத: ப்ரதிதாகாரை: ஸ்வாசார்யபுருஷஸ்ய ஜகதாசார்யபுருஷஸ்ய சாஸ்ய ஶ்ரீவரவரமுநிஸார்வபௌமஸ்ய ஸ்துதிரூபம் பத்யரத்நம் "ஶ்ரீஶைலேஶதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் | யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்" இதி ஸர்வப்ரதிதம் பரமோபாதாநம் தஜ்ஜ விஶேஷம் ஹாஸ்யதி ப்ரகாஶ்ய தஸ்ய ஸமுதேதாரம் ப்ரவாராதிஶயஞ்ச ஸ்வகத க்ருதிதேஶேதி ப்ரயதே ஸோऽயஜிதிஷாஸோ யதீந்த்ரப்ரவணப்ரபாவாதிஷு ப்ரபந்தப்ரகாண்டேஷு |

ஸோऽயம் ஜிதிஷாஸ: ஶ்ரீவைஷ்ணவஶிவாமணீநாம் நித்யாநுஸந்தேயோ ஸமுபாதிதி வரயோ க்ருபயா * ஸௌம்யஜாமாத்ருயோகீந்த்ர சரணாம்புஜஷட்பதோ தேவராஜகுரு: ஶ்ரீஶைலேஶாஷ்டகநாமகம் க்ருதிரத்நம் ப்ரணிநாய | ததேதத்யாநா மஹதாம் நியோகேந வ்யாக்யாயதே இதம்வச இதிநாமி தாஸதாஸேந குருவரஸார்வபௌமகுருகேண ஶரணேந |

॥ உபோத்காதிகா ॥

---

॥ அத க்ரந்தாரம்ப: ॥

ஶேஷ: ஶ்ரீமாநஜநி ஹி புரா ஸௌம்யஜாமாத்ருயோகீ
யோகீ ஸம்ப்ரதம் பகவாந் ராமவஸ்யாநுஜந்மா |
ஸம்ப்ராப்ய ஸவ்யோ வரவரமுநிஸம்ப்ராப்ய ஸாஸமாந:
ரக்ஷத்வஸ்மாந் ரமாகாந்தவத்தோத் ஸ்தாபிதோ ஸ ஸ்வ்ய பீடம் ॥

(வ்யா) ப்ரக்ருதப்ரபந்தப்ரணேதா ஶ்ரீதேவராஜகுரு: ஶ்ரீமத்வரத்திவ்யோத்ஸவி ப்ரஹ்நித்யாரராயநமிரதக்ருஷீக | ஸதாசார்யஸ்யாஸ்ய குருவரஸ்ய ஶ்ரீவரவரமுநீந்த்ர பாத ஸமஸ்கிஸரோ யதா ப்ராதுர்பபூவ, தத: ப்ரப்ருதி ஶ்ரீமத்ஸம்ஸ்தாநே ஸ ஏவ வரவரமுநிஸார்வபௌமஸ்ய ஸாரார்த்யதேவதமாஸீதிதி ஸம்ப்ரதாயவித: | அதோ-



ஸமயதே ஸமவத்ருமிதம் | [ரமாகாந்தவத்தே: ஸ்வ்ய பீடம் ஸ்தாபித:] விராதாராயதேவதயா ஸ்திதஸ்ய பகவதோ ரமேஶஸ்ய ஸிம்ஹாஸநம் க்ருதேஶாந்தேவேண ஸ்வயமேவாங்கீகாரண இத்யர்த: |

ப்ரதமே பாதே ஸௌம்யஜாமாத்ருயோகீந்த்ரபதம் ஶ்ரீமத்வரவரமுநீந்த்ர வாசகமிதி ப்ராயோ பஹுவிதாமேவ ப்ரஸித்தம் ஸ்வரூபஸ்திதிர் ததா | ஸௌம்யஜாமாதா ஸமயோக: கஸ்யாஸ்தீதி ஸௌம்யஜாமாத்ருயோகீ — இதி யோகிநோ விஶேஷணமிதம் | ஸௌம்யஜாமாதேதி பகவாந் ரங்கநாயோ வ்யவஹ்ரியதே | யதஸ்ஸ "அழகியமணவாளன்" இதி பாஷயா ஸம்ஶப்த்யதே | அத ஏவ ஹி ச பட்டார்யை: ஶ்ரீரங்கராஜஸ்தவே — "ஶ்ரீரங்கசந்த்ரமஸமிந்திரயா விஹர்தும் விந்யஸ்ய ஶேஷம் ஶ்ரீஸௌம்யஜாமாத்ருமஹம்" இதி | இஹ ச ரம்யஜாமாதேதி ஶ்ரீரங்கநாத ஏவ வஶீகியதே | ஸ ஏவ யாத ஸௌம்யஜாமாதேத்யுச்யதே | தேந ஸஹ நித்யயோகஜிஜ்ஞாஸு தத்ஸ்வரூபவோ யோ யோகிராஜ:, * ஸ்வஹணவிதாநத்வப்ரணிமாஸாதாரா ஹி உதித ஸாங்கயோக ஸாவ ஶாயிதரூபம் | தேஹஸம்பந்தரோத்தஸிதநிஶ்ஶேஷதாஸ்யம் ஸமணி பதியோகிதமிஸ்ரஸிஸ: ப்ரணதா: * இத்யாதித உபஶ்லோகித:; ஸோऽயம் ஶ்ரீவைகுண்டவாஸய நித்யஸூரிபரிபூர்ணஸ்ய குருஶேஷஸ்ய ப்ரதிப்ரதாநபூத இதி வ்யாக்யம் பவதி |

[ஶ்ரீமாந் ஶேஷ:] * நிவாஸஶய்யாஸநபாதுகாம்ஶுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி: ஶரீரபேதைஸ்தவ ஶேஷதாங்கதைர்யதோசிதம் ஶேஷ இதீரிதே ஜநை: | ஸோऽயம் [புரா ஹி ஸௌம்யஜாமாத்ருயோகீ யோகீ ஜநி] புநஶ்ச ஶ்ரீரங்கநாதஸ்ய ஶுஶ்ரூஷார்தம் யதிராஜதயாஸம்ப்ரதாயஜ்ஞ: |

[ததநு பகவாந் ராமவஸ்யாநுஜந்மா ஸம்ப்ரத:] அத ஸ ஏவ ஶேஷோ பகவத்ராமாநுஜரூபேண ஜஜ்ஞே |

இச்சையுண்டாகிறது. இதிலிருந்து சிலவற்றை அனுபவிப்பதால் கர்வமும் டம்பமும் சிலவற்றை அனுபவிக்க முடியாததால் காமமும் கோபமும் அதிகரிக்கின்றன. இதனால் தான் யார், தன்னுடைய நிஜமான ஸ்வரூபம் என்ன, தன் வாழ்க்கையின் கடைசி நோக்கம் எது, என்பவைவைச் சிறிதும் அறிய முடியாமல், மேன் மேலும் புத்தியும் கெட்டுப்போய், அனேகவித கஷ்டங்களையும் துக்கங்களையும் கொடுத்துக் கொண்டிருக்கிற இந்த ஸம்ஸார ஸாகரத்திலேயே மீண்டும் மீண்டும் முழுகி அழிந்துகொண்டிருக்கிறான்:

ஒருவன் தான் ஆரோக்யமாயிருந்தாலும், தனது மனைவி மக்களின் வியாதிகளைப் பற்றி அவர்கள் பேரில் இருக்கும் பாசத்தால் கவலைப்பட்டு, தான் நோவு படுகிறாப் போல், இந்த ஸம்ஸாரிகள் ப்ரகிருதியிலிருந்து உண்டாகும் சப்தாதி விஷயங்களின் மேல் பாசம் வைத்து, அதனால் நேரிடும் இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, காமம், க்ரோதம், கர்வம், டம்பம் முதலிய துர்க்குணங்களின் கண் வயப்பட்டே நசித்துப் போகிறார்கள். ஆகையால் ப்ரகிருதியையும், அதிலிருந்துண்டாகும் அனேக அல்பமானதும் க்ஷீணித்துக் கொண்டிருக்கும் வஸ்துக்களின் தன்மையையும் நன்றாக அறிந்து, இதற்கு எதிர்த்தட்டாய் ஸ்வாபாவிகமாகவே ஜ்ஞானத்துடனும் ஆனந்தத்துடனும் கூடியிருக்கிற ஆத்மாவின் விலக்ஷணமான ஸ்வரூபத்தை அறியக்கருதி, ஜ்ஞான மனதை சப்தாதி விஷயங்களில் விடாமல், அசித் சம்யோகாப் பந்தத்தால் நேரிடக்கூடிய பிறப்பு, பிணி, மூப்பு, யாசம் இறப்பு, சுகம், துக்கம் முதலிய மாறுதல்களைப் பற்றி வியாகுலமடையாமல், வீடு, மனைவி, மக்கள் முதலிய ஸம்ஸார பாசங்களை அறுத்துக் கொண்டு, வேண்டுமவை வரும்போதும் வேண்டாதவை வரும்போதும் மனதை அமைதியாய் வைத்துக் கொண்டு எப்போதும் காமம், க்ரோதம், கர்வம், கபடம் முதலிய துர்க்குணங்களின் வயமாகாமல், சுத்தம், திடம், திருத்தம், அஹிம்ஸை, தயை, இணக்கம், ஆசாரிய சேவை முதலிய நற்குணங்களுடனும், அடிக்கடி தனியாகவும் சுத்தமாகவும் உள்ள ஓரிடத்தைத் தேடிப்போய், அங்குத் தனக்குச் சிறிது நேரம் உட்கார்ந்து தியானம் செய்வதற்குச் சௌகர்யமான ஓராசனத்தை யிட்டுக் கொண்டு, ப்ராணாயாமக் கிரமத்துடன், சப்தாதி விஷயங்களின்

உழன்று திரியும் மனதை, ஆமை தன் அவயவங்களை உள்ளுக்கு இழுத்துக் கொள்வதைப் போல இழுத்து, ஐந்து நிமிஷமோ பத்து நிமிஷமோ சிறிது நேரம் தன் சக்திக்கும் சௌகரியத்திற்கும் தகுந்தபடி, என் மேல் குறைவில்லாத பக்தியுடன், ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றித் தியானிக்க வேண்டியது. இப்படி திடசித்தத்தோடு ஒருவன் விடாமற் செய்து வந்தானாகில் அவனுக்கு ஜ்ஞானம் மேன்மேலும் அதிகரிக்கும். அவன் பிரகிருதி சம்பந்தமும் அற்று ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் உள்ளபடி கண்டறிவான். அன்றியும் ஒருவனுடைய யோகம் சித்திப்பதற்கு முன் ஒருவன் இறந்து விட்டாலும் மறுபடியும் அவன் யோகிகளின் குடும்பத்திலேயே பிறந்து தன்னுடைய யோகத்தைப் பூர்த்தி செய்து கொள்ளுவான். சரியான வழியில் ஆரம்பிக்கப்படும் எந்தப் பிரயத்னமும் ஒருகாலும் வீணாகாது.

இப்படிப்பட்ட ஜ்ஞான யோகாப்பியாஸம் செய்வது மிகவும் கஷ்டம். அநாதியாக ஆத்மாவுக்குப் பிரகிருதி சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறபடியால் சப்தாதி விஷயங்கள் மனதைத் திரும்பத்திரும்ப தம்வழியே இழுத்துக் கொண்டிருக்கும். ஆனால் ஒருவன் மன உறுதியுடன் தன் மனதையும் இந்திரியங்களையும், இவை வேண்டும் விஷயங்களைக் கண்டபடி கொடாமல் சிறிது சிறிதாகப் பட்டினியிட்டுத் தன் வயமாக்கிக் கொண்டே வந்தானாகில், பிறகு இவ்விஷயங்கள் இவனை அணுகா. ஆனால் இவைகளின் பேரில் இருக்கும் ருசி மாத்திரம் ஆத்மாவை நன்றாக சாக்ஷாத்கரித்தாலல்லது போகாது!"

அர்ஜுனன்:—"கிருஷ்ணா! இது மிகவும் அசாத்தியமென்று தோன்றுகின்றதே! பிரகிருதி சம்பந்தம் அடியோடு அற்றுப் போனாலொழிய ஆத்ம சாக்ஷாத்காரம் முடியாதென்று சொன்னீர். ஆத்ம சாக்ஷாத்காரம் கிடைத்தாலொழிய பிரகிருதியின் பேரில் இருக்கும் ருசி விடாது என்கிறீர். இது என்ன! ஒருவனுக்குக் கல்யாணமானாலொழிய பைத்தியம் தெளியாது, பைத்தியம் தெளிந்தாலொழிய கல்யாணமாகாது, என்று சொல்லுவதைப் போல் இருக்கிறதே!"

கிருஷ்ணன்:—"நீ சொல்லுவது நிஜமே. ஸம்ஸாரத்தின்



கொடுமை இத்தகையது. எல்லாம் அறிந்த பெரிய ஜ்ஞானிகளையும் பண்டிதர்களையும் கூட சில சமயம் பிரகிருதி தன் வயம் இழுத்துக் கடைசியில் நசிப்பித்து விடுகிறது. ஆனால் மனதை எல்லாம் வல்ல என்னிடத்தில் திருப்பினால் கைகூடாத காரியம் ஒன்றுமில்லை. என்னுடைய அழகையும் குணங்களையும் பற்றிச் சிந்திப்பதும் மனதுக்கு ரமணீயமாகவிருக்கும். இதனால் சப்தாதி விஷயங்களின் பேரிலிருக்கும் ருசியை மறந்து, இந்திரிய ஜெயத்தையும் எளிதில் பெறலாம். இந்த வழியில் ஸம்ஸாரத்தினின்றும் மோக்ஷம் அதிக சுலபமாகக் கிடைக்கும்.

அர்ஜுனா! என் மாஹாத்மியத்திற்கு அளவே கிடையாது. இப்பிரபஞ்சம் முழுவதையும் நானே தரிக்கின்றேன். எல்லாவற்றை பகவத் யும் சிருஷ்டிப்பது நானே! ரக்ஷிப்பதும் நானே! ஸம்ஹ ரக்ஷணம் ரிப்பதும்நானே! ஒரு முத்துமாலையை அதனுள்ளிருக்கும் நுண்ணிய நூலானது எப்படி ஒன்றுபடச்சேர்த்து ஆபரணமாகத் தாங்குகிறதோ, அப்படியே பிரபஞ்சத்திலுள்ள ஸகல சராசரங்களையும் சேதனாசேதனங்களையும் நானே அதிக ஸூக்ஷ்மமாய் அந்தராத்மாவாகத்தரித்துக்கொண்டு, அவரவர்கள் இச்சிக்கிறபடியே அவரவரின் விரோதிகளைப்போக்கி அபேக்ஷிதங்களைக் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். பிரளயதசையில் தங்களுடைய ஜ்ஞானத்தையும் ஆனந்தத்தையும் சுத்தமாக இழந்து, அசித்தோடு அசித்தாய் மண்டிக் கிடந்த ஆத்மாக்களின் துர்க்கதியைக் கண்டு ஸஹிக்க முடியாமல், அவர்கள் உஜ்ஜீவிக்கும்படி சிருஷ்டித்து, கைகால் முதலிய அவயவங்களையும் கொடுத்து, இவற்றைக் கொண்டு வியாபரிக்கைக் குடலான சக்தி விசேஷங்களையும் தந்து, ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தி யுக்தனுமான நான், அவரவர் இச்சிக்கிறபடி ரக்ஷித்துக் கொண்டே அவரவரின் இதத்தையும் தேடுகிறேன்.

அர்ஜுனா! இதைக் கவனி. வெகு சிறிய பூச்சி, புழு, பக்ஷி முதலிய அற்ப ஜந்துக்கள் முதற்கொண்டு, மனிதன் தேவன் முதலிய உயர்ந்த ஆத்மாக்கள் வரையில் தங்கள் தங்கள் ருசிக்கீடாகப் பிரகிருதியிலிருக்கும் போகங்களை அனுபவிக்க வைத்துக் கொண்டிருக்கும் கை, கால், கண், மூக்கு, செவி, நாக்கு முதலிய அநேக அற்புத ஸூக்ஷ்ம உபகரணங்களை, எதெதற்கு எதெது எப்படி

வேண்டுமோ அகதற்கு அதையதை அப்படி அப்படியே, தங்க ளுடைய அற்ப ஜ்ஞானத்தையும் சக்தியையும் கொண்டே உண் டாக்கிக் கொண்டார்களா! அல்லது அடியோடு ஜ்ஞானமே இல் லாமலிருக்கும் அசேதனமாகிய பிரகிருதியே 'இதோ என்னை அனுபவிக்க உங்களுக்கு வேண்டிய உபகரணங்களாகவும், பதார்த் தங்களாகவும், நானே பரிணமிக்கின்றேன்' என்று அவரவரின் ருசிக்கிடாக (எதற்கு எது எப்படி வேண்டுமோ அப்படியே) எல் லாவித பதார்த்தங்களாகவும், அனேக ஸூக்ஷ்ம உபகரணங்களா கவும் மாறுகிறதா! இந்தக் காரியம் அல்பஜ்ஞான சேதனர்களா லும் செய்து கொள்ள முடியாது; ஜ்ஞானமே அடியோடு இல் லாத பிரகிருதியாலும் செய்ய முடியாது. ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தியுக்தனுமான நானே இதை நடத்திக்கொண்டு போகிறேன். ஆகையால் ஸகல பிரபஞ்சத்திற்கும் நானே பிதா, நானே மாதா, நானே ஸகல விதத்திலும் ரக்ஷகன். நான் இல்லாவிட்டால் ஒன்றினுடைய ஸ்வரூபமும் ஒரு விநாடியும் ஜீவிக்காது; ஒருவ னுடைய ப்ரவிருத்தியும் ஒரு நிமிஷமும் நிலை நிற்காது; ஒரு வித மான பலனும் ஒரு காலும் கிட்டாது. ஆகையால் ஒருவன் தனக்குத் தானே எஜமானன்; எல்லாக் காரியங்களையும் தானே செய்கிறவன்; எல்லாப் பலன்களையும் தானே அடைகிறவன், என் றிருப்பது அறியாமை; இது தவறான நினைவு; அவனுடைய நாசத் திற்கே ஹேது. ஸர்வமும் என்னுடைய ஆதீனத்திற்குட்பட்டே இருக்கின்றன. ஆகையால் நான் ஒருவனே எல்லாவற்றிற்கும் நிஜமான ஈச்வரன்.

இப்படி ஸர்வத்தையும் நானே என்னுடைய சரீரமாகத் தரித்து, அப்போதைக்கப்போது சிருஷ்டித்து, ரக்ஷித்து, நிய மித்து, அதிக சாமர்த்தியமாய் ஆட்கொள்ளுகிறபடியால், கர்ம ஸம்பந்தத்தால் ஏற்படுகிற ஔபாதிகமான பந்துத்வங்களைச் சிறி தும் கருதாமல், என்னை ஒருவனையே தன்னுடைய ஆத்மாவுக்கும் ஆத்மாவாகவும், ஸகலவித ஆதாரமாகவும், நிருபாதிக பிதாவாக வும், மாதாவாகவும், ரக்ஷகனாகவும், எஜமானனாகவும், பர்த்தாவாக வும், இன்னும் ஸகலவித பந்துவாகவும் அறிந்து, நான் ஒருவனே எல்லாவற்றிற்கும் நிஜமான ஸ்வாமியாகையாலும், வாஸ்தவத்தில் எல்லா போகமும் என்னையே சேர்ந்தபடியாலும், எனக்கே ஸர்வ



விதத்திலும் ஆட்பட்டு, இந்த ஒப்பிலாப் பேற்றுக்கு ஆதியோ டந்தமாக நானே காரணமாய் நிற்கிறபடியால் "இந்தப் பேற் றைத் தந்தவனும் அவனே, இதனால் வரும் ஆனந்தமும் அவனு டையதே," என்று ஒருவன் இருந்தானாகில் அவனே மிகவும் சிறந்த ஜ்ஞானியாவான்.

சிலர் முதலிலேயே மேற்சொன்ன தத்வங்களின் ஸ்வரூபத் தை உள்ளபடி யறிந்து தங்கள் குலக் கடமைகளைத் தாங்களே செய்கிறார்கள்; இந்தக் காரியங்களும் தங்களுடையதே, இவை களால் வரும் பலன்களும் தங்களுடையதே, என்று தோற்றக் கூடிய அஹங்கார மமகாரங்களுக்குச் சிறிதும் இடம் தராமல் இவைகளை நிஷ்காமமாகவும் ஈச்வர அர்ப்பணமாகவும் உலக நன் மையின் பொருட்டும் செய்து, இதனால் பக்தியும் மேன்மேலும் அதிகரித்து, மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெறுகிறார்கள். மற்றும் சிலர் முதலில் தங்கள் குலக் கடமைகளை நிஷ்காமமாகச் செய்து, இதனால் ரஜஸ்தமோ குணங்கள் அடங்கி, ஸத்வம் தலையெடுத்து, ஜ்ஞானமும் வளர்ந்து, பக்தியுடன் என்னைச் சேருகிறார்கள். இன் னும் சிலர் முதலிலேயே என் மேலிருக்கும் குறைவில்லாத பக்தி யினால் அவர்கள் செய்யும் எல்லாக் காரியங்களையும் என்னுடைய ஆராதன ரூபமாக மிகவும் பிரீதியுடன் செய்து, இதனால் ஜ்ஞான மும் அதிகரித்துக் கடைசியில் என்னைச் சேர்ந்து அளவிலா ஆனந் தத்தை யடைகிறார்கள்."

அர்ஜுனன்:—"கிருஷ்ணா! கர்ம யோகத்தைப் பற்றியும் ஜ்ஞான யோகத்தைப் பற்றியும் இப்போது தெரிந்தது. பக்தி யோகத்தைப் பற்றியும் சிறிது விசதமாகக் கேட்க ஆவலாகயிருக் கிறேன்."

**பக்தி யோகம்**

கிருஷ்ணன்:—"உலகத்தில் பெரும்பான்மையோர் என்னு டைய மாஹாத்மியத்தைச் சிறிதும் அறிகிறதில்லை. எல்லா சேதன அசேதனங்களையும் அந்தராத்மாவாகத் தரித்து எல்லாவற்றினுடைய சிருஷ்டி கர்த்தாவாகவும் ஸம்ரக்ஷண கர்த்தாவாகவும், ஸம்ஹார கர்த்தாவாகவும் நானே இருந்து எல்லாவித இதங்களையும் அதிக ஸூக்ஷ்மமாகவும் சாமர்த்தியமாகவும் அன்புடனும் நடத்திக்கொண்டுபோவதை

ஆயிரத்தில் ஒருவன்கூட அறிய முயலாமல், என்னைப்பற்றிப் பிரஸ்தாவிக்கும் சாஸ்திரங்களிலும் சிறிதும் கவனம் செலுத்தாமல், ப்ரக்ருதியிலிருந்துண்டாகும் அல்பமானதும், நீடித்துநில்லாததும், துக்கத்தையும் சுகத்தையும் மாறி மாறியும், கலந்தும் கொடுப்பதுமான சப்தாதி விஷயங்களிலேயே தங்கள் மனதை மேன்மேலும் செலுத்தி, அஹங்கார மமகாரங்கள் விஞ்சி, விருப்பு வெறுப்புகளுடனும், ஜ்ஞானமில்லாமலும், ஸத்காரியங்களைச் செய்யாமலும், காமம், க்ரோதம், கர்வம், டம்பம், கபடம், முரட்டுத்தனம், பேராசை, பிடிவாதம் முதலிய துர்க்குணங்களுடன் தங்களுடைய அற்ப வாழ்நாட்களைக் கழித்து, மீண்டும்மீண்டும் இந்த கோரமான ஸம்ஸார ஸாகரத்திலேயே பிறந்திறந்து, இதை நன்றாகப் பிடிக்கவும் முடியாமல் விடவும் முடியாமல் தவிக்கிறார்கள்.

காமிய பக்தி

சாஸ்திரங்களில் நம்பிக்கையுள்ளவர்களிலேயே சிலர் தாங்கள் இச்சிக்கிற பலன்களை யடைவதற்காக அவரவர்களின் இஷ்ட தேவதைகளைக் குறித்து பக்தி செய்து இவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்துப் பூஜித்து அவரவர்களுக்கு வேண்டிய பலன்களைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள். ஆனால் இந்தப் பலன்களெல்லாம் அற்ப பலன்களே. இப்படிப்பட்டவர்கள் தாங்கள் இறந்தபின் அவரவர்களின் இஷ்ட தேவதையை அடைந்து, அங்குச் சிறிது காலம் சுகித்திருந்தாலும் மறுபடியும் இந்தக் கொடிய ஸம்ஸாரத்திலேயே வந்து பிறக்கிறார்கள்.

எவரெவர் எதையதை எதற்காக விரும்புகிறார்களோ அதற்காகவே அவரவர் அதையதைச் சேருகிறார்கள். இப்படிச் சேரும்படி செய்வதும் நானே. பூலோகத்திலுள்ள அற்ப இன்பங்களிலேயே தங்கள் இச்சைகளைச் செலுத்துகிறவர்கள் பூலோகத்திலேயே மேலும் மேலும் பிறந்து இந்த அற்ப இன்பங்களையே அடைகிறார்கள். சிலர் தாங்கள் கோருகிற பலன்களுக்காகச் சில இஷ்ட தேவதைகளைப் பூசித்து, இறந்தபின் அவர்களையடைந்து சிறிதுகாலம் சுகித்திருந்தாலும், மறுபடியும் மேலும் மேலும் அந்தப் பலன்களை யடைவதற்கே இந்த பூலோகத்தில் வந்து பிறக்கிறார்கள். ஆனால் இந்த அற்ப பலன்களையெல்லாம் கஷ்டத்துடனும் துக்கத்துடனும் கலசியல்லது ஒருகாலும் பூர்ண சந்தோஷத்



துடன் அனுபவிக்க முடியாது இந்த அற்ப பலன்களுக்காக இவ்விஷ்டதேவதைகளைப் பஜிப்பதும் மிகவும் கஷ்டம். இவர் கொடுக்கும் பலன்களும் அவரவர்கள் செய்கிற பக்தியின் அளவுக்குத் தகுந்தபடியாகவே நிற்கும்.

இந்த இஷ்ட தேவதைகளுக்கெல்லாம் மேலானவனாய் இவைகளையும் அந்தராத்மாவாக வியாபித்துத் தரித்து நானே ரக்ஷிக்கிறேன். இவர்களிடத்தில் தோன்றும் ஸ்வல்ப சக்திகளும் குணங்களும் என்னாலேயே கொடுக்கப்பட்டன. இவர்கள், தங்களைப் பஜிக்கிறவர்களுக்குக் கொடுக்கும் பலன்களையும் வாஸ்தவத்தில் இவர்களுடைய அந்தராத்மாவாக இருந்து நானே கொடுக்கிறேன். இவர்களுக்கு அவரவர் அர்ப்பணம் பண்ணுமவைகளும் வாஸ்தவத்தில் இவர்களது அந்தராத்மாவான என்னையே சேருகின்றன. இதை அவர்கள் தெரிந்துகொள்ளாமலிருப்பதால் என்னைச் சேருகிறதில்லை. அவரவர்கள் இச்சிக்கிற பலன்களைக் கொடுப்பதற்குவேண்டிய ஜ்ஞானம், சக்தி முதலிய குணங்களும் என்னிடத்திலிருப்பதுபோல் யாரிடத்திலும் கிடையா. உண்மையில் எல்லோரும் என்னையே சேர்ந்தபடியால் எனக்கு ஜீவகோடிகளின்பேரிற் பெருகும் கருணைக்கும் வாத்ஸல்யத்திற்கும் ஸௌசீல்யத்திற்கும் ஸௌலப்யத்திற்கும் அளவே கிடையாது. சிறிது என்னிடத்தில் பக்தி செய்தவளிலேயே நான் வெகு திருப்தியடைந்து அவரவர் கோரும் பலன்களைக் கொடுக்கிறேன். ஆகையால் எவனொருவன் ப்ரீதியுடன் ஒரு இலையோ, புஷ்பமோ, ஒரு பழமோ, கொஞ்சம் தண்ணீரோ எனக்கு அர்ப்பணம் செய்வானோ, இவை எவ்வளவு சிறிய வஸ்துக்களாயிருந்தபோதிலும், அவனது பக்தியை மெச்சி நான் மிகவும் சந்தோஷத்துடன் இவைகளை ஏற்றுக்கொள்கிறேன். ஆகையால் இதை யறிந்து எல்லோரும் என்னிடத்திலேயே பக்திசெய்து எல்லாவித அபேக்ஷிதங்களையும் பெறலாம்.

பூலோகத்தில் அனேகர் தாங்கள் இழந்த செல்வத்தை மீண்டும் அடையவும், புதிதாய் தனம் சம்பாதித்து அதனால் சுகித்திருக்கவும் என்னைப் பஜிக்கிறார்கள். சிலர் இந்த ஸம்ஸார ஸாகரம் ஸகல விதத்திலும் ஒருவனுக்குக் கஷ்டத்தையே கொடுப்பதை யறிந்து, இதைத் தாள முடியாமல், இதில் வெறுப்புப் பிறந்து,

இனி பிறப் பிறப்பிற்குத் தாங்கள் ஆளாக வேண்டாதபடி, இந்த சுய நலத்தை மாத்திரம் கோரி, என்னைப் பஜிக்கிறார்கள். இவர்கள் கோருகிற பலன்களெல்லாம் என்னையே அடைதலாகிற பரம பாக்கியத்திற்கு மிகவும் குறைந்த அற்ப பலன்களாயிருந்தாலும், இவர்களை நான் உதாரர்களாகவே நினைக்கிறேன். ஏனென்றால் இவர்கள் அஹங்கார மமகாரங்களுடன் தங்கள் பலன்களைத் தாங்களே அடையப் பிரயத்தனப்படாமலும், இன்னும் இதர தேவதைகளைத் தங்களுடைய பரதேவதைகளாக நினைத்து அவர்களிடத்தில் தங்களுடைய பலன்களை வேண்டாமலும் என்னுடைய நிஜமான மாஹாத்மியத்தை யறிந்து, என்னை ஒருவனையே பரதேவதையாகக்கொண்டு, என்னையே பஜித்துத் தங்களபேக்ஷிதங்களைப் பெறுகிறபடியால், இவர்கள் எனக்கு ஓர் புதிய மாஹாத்மியம் கொடுத்தாற்போல் நான் கருதுகிறேன். ஆனால் இவர்கள் என்னைப் பஜிப்பது தங்கள் பலன் கிட்டும் வரையில்தான். பிறகு என்னைச் சிறிதும் நினைப்பதில்லை.

**நிஷ்காம பக்தி**

ஆனால் ஜ்ஞானிகளோ என்னுடைய மாஹாத்மியத்தை சரியாகத் தெரிந்துகொண்டு, என்னுடைய கருணையைத் தவிர தங்களுக்கென்று வேறு எந்த விதமான பலன்களையும் கோராமல், தங்களைச்சேர்ந்த யாவற்றையும் என்னுடையதாகவே பாவித்து எப்போதும் என்னுடைய ஜ்ஞாபகத்துடனேயே இருப்பர்கள். என்மேல் இவர்களுக்கு இருக்கும் பிரீதிக்கு அளவே கிடையாது. எப்போதும் தங்களையொத்த ஜ்ஞானிகளுடன் சேர்ந்துகொண்டும், என்னுடைய மாஹாத்மியத்தைப்பற்றிப் பிரஸ்தாவித்துக்கொண்டும், என்னுடைய குணங்களைப்பற்றியும் அவைகளை விளங்கச்செய்யும் திருநாமங்களைப்பற்றியும் எப்போதும் மயிர்க்கூச்செறிவுடன், கண்களில் நீர் ததும்ப நினைந்து நைந்துள்கரைந்துருகி பஜனை செய்துகொண்டும், எப்போதும் என்னுடைய ஆச்சரிய சரிதங்களைச் சொல்லிக்கொண்டும் இன்னும் எனக்காகக் கோயில் கட்டுதல், நந்தவனம் அமைத்தல், என்னுடைய அடியவர்களுக்குத் தொண்டுசெய்தல் முதலிய சகல வித கைங்கரியங்களில் திட மனதுடனும் பிரீதியுடனும் வணங்கி ஈடுபட்டுக்கொண்டும் தங்கள் காலங்களைக் கழிப்பார்கள். இவர்களுக்கு உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை

## ஸ்ரீ வைகுண்டம் கோயில் நிர்வாஹ அதிகாரி கையாடல் கேஸ்.

ஸ்ரீகண்ணபிரான் கோயில் நிர்வாஹ அதிகாரி கோயில் பணத்தைக் கையாடியதாக நடந்த வழக்கில், எதிரி தாம் குற்றவாளி அல்ல என்று வாதித்தார். வழக்கை விசாரித்த ஸ்ரீவைகுண்டம் சப்மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீமான் என். கே. நம்பி அய்யங்கார் எதிரி மீது இ. பி. கோ. 408-வது பிரிவின்படி குற்றம் ருஜுவாயிருக்கிறதென்று அவருக்கு 27-8-40ல் 4 மாதம் காவலும், ரூ. 200 அபராதமும் தண்டனையாக விதித்தார்.

எதிரி அப்பீல் செய்து ஜாமீன் மனுவும் கொடுத்ததன்பேரில், ஜாமீனில் விடப்பட்டு, கேஸ் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

## ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹ அதிகாரி கையாடல் கேஸ்.

ஸ்ரீரங்கம் கோயிலுக்கு எக்ஸிக்யூடிவ் ஆபீஸராயிருந்த ஸ்ரீ. எஸ். ராஜகோபால நாயுடு மீது கோயில் பணத்தைக் கையாடல் செய்ததாக போலீஸாரால் திருச்சினாப்பள்ளி ஸப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட் முன்பாக ஒரு கிரிமினல் வழக்கு தொடரப்பட்டதில் இதுகாறும் ஸேவார்த்திகளில் இருவர் போஸ்டல் அதிகாரிகளில் மூவர்—ஆக ஐந்து நபர்கள் சாக்ஷிகளாக விசாரிக்கப்பட்டு, ஷை கேஸ் நாளது செப்டம்பர் மாதம் 11, 12, 13 தேதிகளில் அந்த நல்லூர் முகாமில் வாயிதா போடப்பட்டிருக்கிறது. அப்போது கோயில் உத்தியோகஸ்தர்களில் சிலர்கள் சாக்ஷிகளாக விசாரிக்கப்படுவார்களெனவும் தெரிகிறது.

## நமது அம்ருதலஹரியின் போஷகர்கள்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
திருமலே திருப்பதி ஜீயங்கார் ஸ்வாமி, திருப்பதி.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்.

ஸ்ரீமத். உ. வே. கோயில் கந்தாடை
அண்ணன் ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்.

ஸ்ரீமான் ராவ் ஸாஹிப்
**S. திருமலே அய்யங்கார் அவர்கள்,**
ரிடயர்டு டிப்டி கலெக்டர், ஸ்ரீரங்கம்.

ஸ்ரீமான் **R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்கள்,**
டாக்டர், குளித்தலே.

ஸ்ரீமான் **K. நரஸிம்மய்யங்கார் அவர்கள்,**
மிராஸ்தார், ஸ்ரீரங்கம்.

ஸ்ரீமான் **K. கஸ்தூரி ரெங்கய்யங்கார் அவர்கள்,**
மானேஜர், K. S. T. பாடசாலே, ஸ்ரீரங்கம்.

ஸ்ரீமான் குளக்குடி
**சுந்தரராஜய்யங்கார் அவர்கள்,**
நாகனுதபுரம், காரைக்குடி.

**கோயில் தென்னுசார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷண ஸபை, ஸ்ரீரங்கம்.**

ஸ்ரீமான் ப்ரபந்த வித்வான்
**T. D. இராமஸ்வாமி நாயுடுகாரு,**
திருப்புறம்பயம், கும்பகோணம்.

ஸ்ரீமான் திவான் பஹதூர்
**C. V. வெங்கடரமணய்யங்கார் அவர்கள்,**
B. A., B. L., F. R. S. A.
தர்மவிலாஸ், கோயம்புத்தூர்.

ஸ்ரீமான்கள்.
கொம்பல்லி. ராமசந்திரராவ், நரஹரிராவ்,
ஸ்ரீராமன் ஸந்நிதி தர்மகர்த்தாக்கள்,
கந்திகல்மேடு, ஹைதராபாத்.

***Edited, Printed and Published by Pandit S. M. Sundara-rajacharya at the Sri Vilasam Press, Srirangam.***

